University of Madras.

# F. A. TEXT FOR 1902.

## RAMAYANA VENPA

## POREPURI KANDAM

BY


Tanjore

SATHAVADHANAM - SUBRAMANIYA AIYAR.

*Head Tamil Pandit, St Thome College, Mylapore, Madras*


WITH AUTHOR'S NOTES

---

1902 - ம் வருஷத்து F. A. பாடம்.

# இராமாயண வெண்பா.

மூன்றாவது

## போர்புரிகாண்டம்


தஞ்சாவூர

சதாவதானம் - சுப்பிரமணிய ஐயர்,

இயற்றியது.


---

நூலாசிரியருரையுடன்

---


Madras:

PRINTED AT THE MEMORIAL PRESS,

1900

Price 8 Annas.

உ

கடவுள் துணை.

# முகவுரை.

---

பூமகண்மார்பகம் பொலிமதாணியினடு மாமணிபிகர்த்து வனப்பின் விழு
மிய கோசலநாட்டின் நடுநாயகமாகிய அயோத்திமாநகரில் ஆழியொன்று
ருட்டி ஆஞ்ஞைசெலுத்திய தசரதசக்கரவர்த்தியின் திருமகனாயவதரித்தரு
ளிய இராமபிரானது சரிதை முழுமையும் யான் வெண்பாயாப்பினால் ஐந்து
காண்டங்களாக வகுத்தியற்றியுள்ள **இராமாயணவெண்பா** என்னும் நூ
லில் கனம்பொருந்திய சென்னைச்சர்வகலாசங்கத்துத் திராவிடபாடசபையா
ரால் 1900 - வது 1901 - வது வருடங்களின் F. A. பரீக்ஷைக்குப் பாட
புத்தகங்களாக முறையே அவதாரகாண்டம், வனம்புகுகாண்டம் நியம
னஞ்செய்யப்பெற்று அச்சிட்டுப் பிரசுரஞ்செய்யப்பட்டிருக்கின்றன.

அதான்று,

1902 - வது ௵ F. A. பரீக்ஷைக்கும் பாடபுத்தகமாக ௸ இராமா
யணவெண்பாவின் மூன்றாவது காண்டமாகிய **போர்புரிகாண்டம்** ௸
சபையார் நியமனஞ்செய்திருத்தலால் அதனைப் பதவுரை குறிப்புரைகளுடன்
அச்சிட்டுப் பிரசுரிக்கப் புகுந்தனன்.

உவரிமுகந்துண்டு உவர்நீக்கி உண்ணீராக்கி உலகிற்குதவும் உயர்குணத்
தெழிலியை உவமைகொண்டுற்ற உத்தமவித்துவ வித்தகர் இதனுட்கிடக்கும்
என்சொல்வழுஉக்கள் எனைத்தையுமிகந்து இராமபிரானது இனிய சரிதை
மழையை மாணவர்செவியெனும வயலவாய்ப்பெய்து அறிவெனும் பைங்கூழ்
அணிபெறவளர்த்து வெறுமையில் பெரும்பயன் விளைத்திட வேண்டுகின்
றனன்.

இங்ஙனம்,
தஞ்சாவூர்,

**சதாவதானம் - சுப்பிரமணிய ஐயன்,**
**தமிழ்ப்பிரதமபண்டிதன்,**
**ஸேண்தோம் காலேஜ்,**
**சென்னை.**

சென்னை,
1901 ௵
ஜனவரி ௴

உ

கடவுள் துணை.

# இராமாயணவெண்பா.

௩-வது,

## போர்புரிகாண்டம்.

(யுத்தகாண்டம்.)

1. இன்னணங்காகுத்த னிருங்கடற்பாற் றானையொடு
துன்னி யுறக்கேட்டுத் தொல்லிலங்கை—மன்னும்
பணையிருபான் றோளுடையான் பாங்கமர்ந்த தேர்ச்சித்
துணைவரொடு தேர்தலுற்றான் சூழ்ந்து.

இன்னணம்=இவ்வாறு, காகுத்தன்=இராமபிரான், இரு கடல்பால்=பெரியகடலின் கரையில், தானையொடு=வானரசேனையோடு, துன்னி உற=நெருங்கிவந்து தங்கியிருக்க, தொல்=பழமையான, இலங்கை மன்னும்=இலங்கையில் நிலைத்திருக்கின்ற, பணை இருபான் தோள் உடையான்=பருத்த இருபது தோள்களையுடைய இராவணன், கேட்டு=(அசெய்தி) கேள்வியுற்று, பாங்கு அமர்ந்த=பக்கத்திலுள்ள, தேர்ச்சித்துணைவரொடு=மந்திரிகளோடு, சூழ்ந்து தேர்தல் உற்றான்=ஆராய்ந்தறியத்தொடங்கினான்.

இன்னணம் - இன்னவண்ணம் என்றதின் மரூஉ. காகுத்தன் - ககுத்தன் என்னும் அரசனது மரபிற் றோன்றியவன்.

2. அஞ்ஞான்று வீடணன்றன் னண்ணன் முகநோக்கி
யெஞ்ஞான்றுங் கற்பழியா வேந்திழையை—யிஞ்ஞான்றே
விட்டிடுத னன்றெனவவ் வெய்யோன் வெகுண்டொறுக்கப்
பட்டவன்புக் கான்பரமன் பால்.

அஞ்ஞான்று வீடணன்=அப்பொழுது வீடணன், தன் அண்ணல் முகம் நோக்கி=தனது மூத்தோனாகிய இராவணன்முகத்தைப் பார்த்து, எஞ்ஞான்றும் கற்பு அழியா=எக்காலத்தும் கற்புடைமை நீங்காத, ஏந்திழையை=சீதையை, இஞ்ஞான்றே=இப்பொழுதே, விட்டிடுதல் நன்று என=நீக்கிவிடுதல் நன்மை என்றுசொல்ல, அ வெய்யோன்=அந்தக்கொடிய இராவணனால், வெகுண்டு ஒறுக்கப்பட்டு=கடிந்து கோபிக்கப்பட்டு,

அவன் = அவ்விபீடணன், பரமன்பால் = மேலோனாகிய இராமபிரானிடத்து புக்கான் = சரணமடைந்தனன்.

உம்மை - முற்றும்மை. ஏகாரம் விரைவுப்பொருட்டு. ஏந்திழை - வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை.

வந்த விளவறனை மாருதிசொல் லானட்டேற்
றிந்தவிலங் கைக்கிறைநீ யேயென்று — முந்துமுடி
சூட்டினான் முன்னோர்கவித் தோன்றலிள வற்குமுடி
சூட்டினா னன்பு சுரந்து.

முன் ஓர் கவி தோன்றல் இளவற்கு = முன்பு ஒருவானரத்தலைவனாகிய வாலியின் தம்பியான் சுக்கிரீவனுக்கு, முடி சூட்டினான் = பட்டங்கட்டுவித்த இராமபிரான், வந்த இளவல்தனை = தன்னிடத்தடைக்கலமாய் வந்த இளையோனாகிய விபீடணனை, மாருதி சொல்லால் நட்டு ஏற்று = அநுமான்சொல்லினால் சிநேகித்து ஏற்றுக்கொண்டு, அன்பு சுரந்து = (அவனிடத்து) அன்பு மிகுந்து, இந்த இலங்கைக்கு = இந்த இலங்காபுரிக்கு, நீ ஏ இறை என்று = நீயே அரசனென்று, முந்து முடி சூட்டினான் = முன்னரே முடிசூட்டினான்.

ஏகாரம் - தேற்றம். முந்துமுடிசூட்டினான் எ - து இராவணசங்காரஞ் செய்தல் உறுதியாதல்பற்றியென்க. இளவற்குமுடிசூட்டினான் எ - து முடிசூடல் மூத்தோனுக்கியல்பாயினும் அவன்கொடியனாயின் அவனைக்கொன்று இளையவனுக்கு முடிசூட்டுவித்தல் இராமபிரானுக்கு இயற்கைபோலும் என்றதாம். இது கருத்துடையடைகொளியணி.

4. பின்னர்க் கடலடைப்பான் பெம்மான் விடைக்குறியோன்
றன்னைக்குறித்துத் தருப்பையணை — மன்னியிருந்
தேழுதின நோற்பவவ னெய்திலனெய் யம்பொன்றா
லேழுகட லும்புகைந்த வே.

பெம்மான் = பெருமானாகிய இராமபிரான், பின்னர் = பின்பு, கடல் அடைப்பான் = கடலையடைக்கும்பொருட்டு, விடைக்குறியோன் தன்னை = இடபத்தை அடையாளமாக்கொண்ட வருணதேவனை, குறித்து = உத்தேசித்து, தருப்பை அணை மன்னி இருந்து = தருப்பைப்புல்லாலாகிய சயனத்தில் பொருந்தியிருந்து, ஏழுதினம் நோற்ப = ஏழுநாட்கள்வரையில் தவஞ்செய்யவும், அவன் எய்திலன் = அவ்வருணதேவன் எதிர்வந்தானிலனாக, எய் = (மிக்கசினங்கொண்டு) எய்த, அம்பு ஒன்றால் = ஒருபாணத்தினால், ஏழு கடலும் புகைந்த = ஏழுகடல்களும் கொதித்துப்புகைந்தன.

தன் ஏ அசைநிலைகள். பெம்மான் - பெருமான் என்பதன் மரூஉ. இடபம் மேற்றிசைப்பாலன் குறியாதலின் விடைக்குறியோ னென்றது. உம்மை - முற்றும்மை. அடைப்பான் - எதிர்காலவினையெச்சம்.

இராமபிரான் கடலடைக்க வருணனைக்குறித்துத் தென்கடற்கரையில் தருப்பையணையில் தங்கினோற்ற தலம் தருப்பசயனம் என வழங்குகின்றது.

5. ஆழி புகைந்திடலு மவ்வருணன் வந்திறைஞ்சி
யாழி யடைப்பா னறைந்தேக—வாழியன்பின்
சேது நளனாற் கட்டிச் சென்றிருந்தான் றண்டொடுவிண்
மீதுயர்சு வேலவெற்பின் மேல்.

அவ்வருணன்—அந்த வருணதேவன், ஆழி— (தனக்கு அதிட்டானமாகிய) கடலானது, புகைந்திடலும்=வெப்பியவுடன், வந்துஇறைஞ்சி=வந்து வணங்கி, ஆழி அடைப்பான் அறைந்து ஏக=கடலை அடைத்துக்கொள்ளச் சொல்லிச் செல்ல, பின்—பின்பு, ஆழியன்—சக்கரதாரியானஇராமபிரான், சேது நளனால் கட்டி—அணையை நளனென்னும் வானரனால் (மலைகளைக் கொண்டு) கட்டுவித்து, சென்று= (அவ்வழியால் கடலைக்கடந்து) சென்று, விண்மீது உயர்=ஆகாயத்தினிடை உயர்ந்திருக்கின்ற, சுவேலவெற்பின் மேல்= (இலங்கையிலுள்ள) சுவேலபருவதத்தினிடத்து, தண்டொடு இருந்தான்=வானரசேனையுடன் தங்கியிருந்தனன்.

புகைந்திடலும் - உம் ஈற்று வினையெச்சம்.

6. உற்ற விபீடணனங் குற்றசுக சாரணரைப்
பற்றி முனம்விடுப்பப் பார்த்தமல—னொற்றர்தமை
வீட்டறகா தென்னா விடுத்தா னரக்கரிறை
மாட்டவரெல் லாம்வகுத்தார் வந்து.

உற்ற= (இராமபிரானோடு) சேர்ந்த, விபீடணன்=விபீடணனெனவன், அங்கு உற்ற சுகசாரணரை=(இராவணனாலேவப்பட்டு) அங்குவந்த சுகன் சாரணன் என்னும் ஒற்றர் இருவரையும், பற்றி=பிடித்து, முனம் விடுப்ப=எதிரில் கொண்டுவந்து விட, அமலன் பார்த்து=மலரகிதனான இராமபிரான் அவரைநோக்கி, ஒற்றர்தம்மை வீட்டல்=தூதுவந்தவரைத் தண்டித்தல், தகாது என்னா விடுத்தான்=தகுதியன்றென்றுசொல்லி விடுவித்தனன், அவர்=அவ்வொற்றரிருவரும், (பின்பு) அரக்கர்இறைமாட்டு வந்து=இராக்கதர்தலைவனான இராவணனிடத்து மீண்டுவந்து, எல்லாம் வகுத்தார்=அங்கு நிகழ்ந்தனவற்றையெல்லாம் எடுத்துச்சொல்லினர்.

சுகசாரணர் -"உயர்திணையும்மைத்தொகை பலரீறே" என்றதனால் பன்மைவிகுதிபெற்றது.

7. வெற்பெடுத்தான் கோசலத்தார்வேந்துதனைக் காண்பானோர்
பொற்பெடுத்தோங் குங்கோ புரமிவர—மற்புயத்துத்
தாசரதி தானுந் தன்முகற்காண் பானிவர்ந்தான்
பாசறையா மம்மலைமேற் பால்

வெற்பு எடுத்தான் = கைலைமலையையெடுத்தானாகிய இராவணன், கோசலத்தார் வேந்தனை — கோசலநாட்டாருக் கிறைவனாகிய இராமனை, காண்பான் = பார்க்கும்பொருட்டு, பொற்புஎடுத்து ஓங்கும் — அழகினால் உயர்த்தப்பட்டு நீண்ட, ஓர்கோபுரம் இவர = ஒருகோபுரத்தின்மேல் ஏறிநிற்க, மல்யுத்த தாசரதிதானும் — மற்போரில்வல்ல தோளையுடைய தசரதகுமாரனான இராமபிரானும், தசமுகன் காண்பான் = இராவணனை நோக்கும் பொருட்டு, பாசறை ஆம் அ மலைமேல்பால் = படைவீடாகிய அந்தச் சுவேலமலையின் மேலிடத்தில், இவர்ந்தான் = ஏறிநின்றனன்.

தன் தான் அசைநிலைகள். வெற்பெடுத்தான் - வினையாலணையும்பெயர்; முன்னர் இராவணன் திக்குவிசயஞ்செய்யச் சென்றபோது கைலைமலையைப்பெயர்த்தவனாதலின்.

உம்மை - இறந்ததுதழீஇயவெச்சம். இவர இவர்ந்தானெனமுடிக்க.

8\. வீடணன்றான் வெவ்வரக்கர் வேந்தனிவ னென்றுசுட்ட
மேடமுச்ச முற்றான்சேய் மேற்சிகரி—நாடியுற்ற
வெய்யவன்மேற் பாய்ந்துமுடி வீழ்த்தி விசையங்கொண்
டையனைத்தாழ்ந் தான்மீண் டடைந்து.

வீடணன் — விபீடணனானவன்; இவன் — (கோபுரத்தின்மேலேறிநிற்கின்ற) இவனே, வெம்அரக்கர் வேந்தன் — கொடிய இராக்கதர்க்கரசனாகிய இராவணன், என்று சுட்ட = என்று சுட்டிக்காட்டலும், மேடம் உச்சம் உற்றான் சேய் = மேடராசியை உச்சத்தானமாக்கொண்ட சூரியனது புத்திரனாகிய சுக்கிரீவன், மேல்சிகரி நாடிஉற்ற = கோபுரத்தின்மேல்ஏறிநின்ற, வெய்யவன்மேல் பாய்ந்து — கொடியோனாகிய அவ்விராவணன்மேல் பாய்ந்து, முடிவீழ்த்தி = அவனது கிரீடத்தைக் கீழ்த்தள்ளி, விசையம்கொண்டு — வெற்றிபெற்று, மீண்டு அடைந்து — திரும்பிவந்து, ஐயனை தாழ்ந்தான் = தலைவனாகிய இராமபிரானை வணங்கினான்.

தான் அசைநிலை. மேடராசி சூரியனுக்கு உச்சத்தானம் என்பது சோதிடநூற்கொள்கையாமாதலின் மேடமுச்சமுற்றான் என்னப்பட்டது; உச்சத்தானம் - உயர்ந்த இடம்.

9\. பின்னரங்க தன்றன்னைப் பெம்மான்றூ தேவக்கோன்
முன்னு மரக்கரிறை முன்னுற—வன்னவன்றா
னீயாவ னென்னமுன நின்னைவா லிற்பிணித்தான்
சேயாமென் றானன்றேன் றேர்ந்து.

பின்னர் = பின்பு, பெம்மான் — இராமபிரான், அங்கதன் தன்னை — வாலிகுமாரனான அங்கதனை, தூது ஏவ — தூதாக அனுப்ப, கோன் முன்னும் அரக்கர் இறை முன்னர் — குற்றங்களைச்செய்யக்கருதுகின்ற இராக்கதர்தலைவனான இராவணனுக்கு முன்பு, உற = (அவன்) அடைய, அன்னவன் = அவ்விராவணன், நீ [illegible] — நீ யாரென்று வினவ, [illegible] அங்கத

னானவன், தேர்ந்து = ஆலோசித்தறிந்து, நின்னை முனம் வாலில் பிணித்தான் = உன்னை முன்னாளில் வாலினாற் கட்டியவனாகிய வாலியின், சேய் ஆம் என்றான் = புத்திரன் (யான்) என்று விடைபகர்ந்தனன்.

தன் தான் ஆம் அசைநிலைகள். வாலில் பிணித்தான் எ-து முன்பு வாலி திக்குவிசயஞ்செய்யத் தென்றிசையிற் சென்றபொழுது இராவணன் பின்புறத்தில் வந்து கட்டிக்கொள்ள அவனைத் தன்வாலினாற்கட்டிக்கொண்டு கிட்கிந்தைக்குவர இராவணன் வருந்திப் பிரமனைவேண்ட அப்பிரமன் வேண்டுகோளால் கட்டவிழ்த்து விட்டனன் என்பதாம். "நின்னைவாலிற்பிணித்தான் சேய்" என்றது. இராவணனை இழித்துக்கூறிய இகழ்ச்சிக்குறிப்பு.

10. என்றிகழ வெந்தரக்க னெங்குளதி லங்கையைமுன்
றுன்றியெரித் திட்டகவி சொல்லென்ன — நின்றனய
னத்திரத்தால் வீக்குமிழி வாற்றள்ளுண் டோடிற்றா
லெத்திசைத்தோ வென்றா னிழித்து.

என்று இகழ = என்று இகழ்ந்துசொல்ல, அரக்கன் வெந்து = இராவணன் மனங்கொதித்து, இலங்கையை = இலங்காபுரியை, முன் துன்றி = முன் அடைந்து, எரித்திட்ட கவி எங்கு உளது = எரித்த குரங்கு எங்கு இருக்கின்றது, சொல் என்ன = சொல்வாயென்று வினவ, (அங்கதன்), இழித்து = இகழ்ந்து, (அக்குரங்கு) நின் தனயன் அத்திரத்தால் = உன் மகனான (இந்திரசித்தனது) பிரமாத்திரத்தால், வீக்கும் இழிவால் தள்ளுண்டு = கட்டுண்ட இழிவினால் (எங்களினின்றும்) தள்ளப்பட்டு, ஓடிற்று = ஓடியது, எத்திசைத்து ஓ என்றான் = (இப்பொழுது) எத்திக்கிலுள்ளதோ என்று விடைபகர்ந்தனன்.

ஓ கழிவிரக்கப்பொருட்டு. ஆல் அசை. தள்ளுண்டோடிற்று எ-து தள்ளுண்ட குரங்கே இலங்கையை எரித்ததெனின் உயர்ந்த எமதுவலிமையைத் தெரிவாய் என்னலைக் குறிக்கின்றது. இப்பாட்டில் அநுமனிந்தையால் மற்றைவானரர்களுக்குப் புகழ்ச்சிதோன்றினதனால், வஞ்சப்புகழ்ச்சியணி.

11. வென்றிபெறு கற்பவளை விட்டிடுதி யின்னேநீ
யென்றறையப் பின்றீயோ னிக்குரங்கைக் — கொன்றிடுவீ
ரென்ன வெதிர்த் தார்க்கொன் றிராகவன்பா லங்கதன்போந்
தன்னவவன் கோள்சொற்றா னால்.

பின் அங்கதன் = பின்பு அங்கதனானவன், வென்றிபெறு கற்பவளை = கற்பினால் எவரையும் வென்ற சீதாபிராட்டியை, இன்னே நீ விட்டிடுதி = நீ இப்பொழுதே விடக்கடவாய், என்று அறைய = என்று (இராவணனை நோக்கிச்) சொல்ல, தீயோன் இ குரங்கை கொன்றிடுவீர் என்ன = கொடியவனாகிய இராவணன் இவ்வானரத்தைக் கொல்லுங்களென்று [கிங்கரரை நோக்கிக்] கூற, எதிர்த்தார் கொன்று இராகவன்பால் போந்து = எதிர்த்த அவரைச்சங்கரித்து இராமபிரானிடத்து வந்து சேர்ந்து, அன்ன அவன் கோள் சொற்றான் = அத்தன்மையனான அவ்விராவணனது தீமைகளைச்சொல்லினன்.

ஆல் அசை. இன்னே - நிகழ்காலங்குறிப்பதோர் இடைச்சொல்.

12. அங்கதனுற் றவ்வா றறைந்திடலுந் தாசரதி
பொங்குகவித் தானைப் பொருகடலோ—டங்ககத்திற்
கஞ்சலுறா நெஞ்சத் தரக்கர்கணஞ் சூழிலங்கை
யிஞ்சியினைச் சூழ்ந்தா னெதிர்த்து.

அங்கதன் உற்று அவ்வாறு அறைந்திடலும்=அங்கதனானவன் அடைந்து அவ்வண்ணம் சொல்லுதலும், தாசரதி=இராமபிரான், அங்கு அகத்திற்கு அஞ்சல் உறா=அவ்விடத்தில் பாவச்செயல்களுக்கு அஞ்சாத, நெஞ்சத்து அரக்கர்கணம் சூழ்=மனத்தையுடைய இராக்கதர் கூட்டம் சூழ்ந்த, இலங்கை இஞ்சியினை=இலங்காபுரியின்மதிலை, எதிர்த்து=எதிர்த்து, பொங்கு பொரு கவி தானை கடலோடு=மிகுந்த மோதுகின்ற வானரசேனாசமுத்திரத்தோடுசேர்ந்து, சூழ்ந்தான்=வளைந்துகொண்டான்.

அறைந்திடலும் உம்விகுதிபெற்ற வினையெச்சம்.

13. வானரவ ருதினியம் மாண்புரிசை சூழ்ந்தார்த்து
மேனவிலும் பூசலுணர் வெந்நிருதர்—கோனடல்சான்
மன்னர்குழாங் கூடி மருவினரைக் காக்குமருள்
வள்ளலொடும் போரேற்றார் வந்து.

வானர வருதினி=வானரசேனைகள், அ மாண் புரிசை சூழ்ந்து=அந்த மாட்சிமைப்பட்டமதிலைச் சூழ்ந்துகொண்டு, ஆர்த்து மேல் நவிலும் பூசல் உணர்=கர்ச்சித்ததிகமாய்க்கூவிய பேரொலியைக்கேட்டறிந்த, வெந்நிருதர் கோன்=கொடிய இராக்கதர்தலைவனான இராவணனது, அடல் சால் மன்னர்=வலிமைமிக்க படைவீரர்கள், குழாம் கூடி வந்து=கூட்டமாய்ச் சேர்ந்துவந்து, மருவினரை காக்கும் அருள்வள்ளலொடும்=(தன்னை) அடைந்தவரைக்காக்கின்ற கருணைத்தியாகியான இராமபிரானுடன், போர் ஏற்றார்=போர்புரிய எதிர்த்தனர்.

வருதினி=வடமொழித்தற்பவம். உம் - உயர்வுசிறப்பு. அடைந்தவரைக்காக்கும் அருள் எ - து சரணம்புகுந்த சுக்கிரீவவிபீடணரைக் காத்த கருணையை நோக்கி என்க.

14. வெம்பார் பிரசங்கன் வெய்துவந்து போரியற்றச்
சம்பாதி வெற்பொன்றாற் சாய்த்திட்டான்—கம்பமந்து
காலின்மக னோர்துருமங் கைக்கொடுபோ தச்சம்பு
மாலியுயிர் மாய்ந்தான் மடிந்து.

வெம்பு ஆர் பிரசங்கன்=மனக்கொதிப்பை அடைந்த பிரசங்கனென்னும் அரக்கன், வெய்து வந்து=விரைந்து வந்து, போர்இயற்ற=யுத்தஞ்செய்ய, சம்பாதி வெற்பு ஒன்றால் சாய்த்திட்டான்=சம்பாதியென்னும் கழுகிறைவன் (அவனை) ஒருமலையினால் கொன்றனன், காலின்மகன்=வாயுபுத்திரனான

அநுமான், கம் பாய்ந்து=ஆகாயத்தில்தாவி, ஓர் துருமம்கைக்கொடுபோத= ஒரு மரத்தைக் கையாற்பிடுங்கிக்கொண்டு புக, சம்புமாலி=சம்புமாலி யென்னும் அரக்கன், மடிந்து உயிர்மாய்ந்தான்= (அம்மரத்தினலடிபட்டுச்) சாய்ந்து இறந்தனன்.

வெம்பு=மூந்தனிலைத்தொழிற்பெயர். சம்பாதி=சடாயுவின் தமையன்; இவனும் இராமபிரான்சேனையோடுசேர்ந்து வந்துளான்.

இதுமுதல் ஆறுசெய்யுட்கள் வானரப்படைக்கும்இராக்கதப்படைக்கும் நடந்த துவந்தயுத்தம்.

15. வல்லான் பிரதபனன் வந்துசம ராற்றநளன்
கொல்லாரு மோர்கதையாற் கொன்றனன்பின்—மல்லாருந்
தோட்டபனன் போந்துடற்றச் சூழ்ந்துகச னன்னவனை
வீட்டிவிசும் பூர்க்குய்த்தான் வெய்து.

வல்லான் பிரதபனன்=வலியோனாகிய பிரதபனனென்னும் அரக்கன், வந்து சமர் ஆற்ற=எதிர்த்துவந்து போர்புரிய, நளன்=நளனென்னும் வானரவீரன், கொல ஆரும் ஓர் கதையால் கொன்றனன்=கொல்லுதற் றொழிலையுடைய ஒரு தண்டாயுதத்தால் கொன்றனன், பின் மல் ஆரும் தோள் தபனன்=பின்பு மற்போரில் வலிமையுற்ற புயங்களையுடைய தபனனென்னும் அரக்கன், போந்து உடற்ற=புகுந்துபோர்புரிய, கசன்=கசனென்னும் வானரன், அன்னவனை சூழ்ந்து=அவ்வரக்கனை வளைந்து, வெய்து வீட்டி விசும்பு ஊர்க்கு உய்த்தான்=விரைவில் கொன்று வீரசுவர்க்கத்துக்குச் செலுத்தினன்.

ஓர் - ஒன்றென்பதின் விகாரம். விசும்பூர்க்குய்த்தான் எ - து போர்க்களத்திறந்தார் வீரசுவர்க்கம்புகுமியல்புபற்றி என்க. வெய்து - விரைவுக்குறிப்பிடைசசொல்.

16. மித்துருக்கன் வந்தெதிர வீடணன்றண் டாலவனை
யத்துறக்க மாதர்விருந் தாக்கினனாற்—சத்துருக்கன்
போற்று மிலக்குவன்றான் போந்தவிரூபாக்கனைவில்
லேற்றுகணைக்கூணளித்தா னெய்து.

மித்துருக்கன்=மித்துருக்கனென்னும் அரக்கன், வந்து எதிர=வந்து எதிர்த்துப்போர்புரிய, வீடணன்=விபீடணன், தண்டால் அவனை=தண்டாயுதத்தால் அவ்வரக்கனை, அ துறக்கம் மாதர் விருந்து ஆக்கினன்=அந்த வீரசுவர்க்கத்திலுள்ள அரம்பைமாதருக்கு விருந்தாகச்செய்தனன், (கொன்றனன்என்றபடி) போந்த விரூபாக்கனை=போருக்குவந்த விரூபாக்கனென்னும் அரக்கனை, சத்துருக்கன் போற்றும் இலக்குவன்=பகைவரும் துதிக்கின்ற இலக்குமணன், எய்து=எவி, வில் ஏற்று கணைக்கு=வில்லில் ஏறிட்ட அம்புக்கு, ஊண் அளித்தான்=உணவாகக்கொடுத்தனன் (கொன்றனன் என்றபடி).

ஆல் தான் — அசைநிலைகள். அறக்கமாதர் விருந்தாக்கினான் எ - தும், கணைக்கூணனித்தான் எ - தும் மங்கலமாகிய தகுதிவழக்குகள். மித்துருக்கன், வீடணன், இலக்குவன் இவை வடமொழி மரூஉ.

17. கூர்வேற் பிரகசன்போர் கொண்டுடற்ற வங்கொற்றத்
தார்வேய் இரவிமகன் சங்கரித்தான் — சூர்வேய்ந்த
தோமரத்தி னான்மயிந்தன் சூழ்வச் சிரமுட்டி
யாமரக்க னைப்புடைத்தா னார்த்து.

கூர்வேல் பிரகசன் = கூரிய வேலைத்தரித்த பிரகசன் என்னும் அரக்கன், போர் கொண்டு உடற்றலும் = கோபங்கொண்டு போர்புரியவந்ததும், கொற்றம் தார் வேய் = வெற்றிமாலைபூண்ட, இரவிமகன், சங்கரித்தான் = சூரியபுத்திரனான சுக்கிரீவன் (அவனைக்) கொன்றனன், சூழ் = போருக்குச்சூழ்ந்த, வச்சிரமுட்டி ஆம் அரக்கனை = வச்சிரமுட்டி என்னும் அரக்கனை, சூர்வேய்ந்த தோமரத்தினால் = வலிமைபொருந்திய இருப்புலக்கையால், மயிந்தன் = மயிந்தனென்னும் வானரன், ஆர்த்து புடைத்தான் = கர்ச்சித்து அடித்தனன்.

ஆம் எ - து ஆகும் என்னும் பெயரெச்சத்தின் ஈற்றுயிர்மெய் "செய்யுமெனெச்சவீற்றுயிர்மெய் சேறலும்" என்றதனாற் கெட்டது.

18. எச்சகோ பன்சுதக்க னேனக் கினிகேது
துச்சன்ணிரச்சமிகே துப்பெயர்கொ — ணச்சுநேர்
நெஞ்சனெனு நால்வரமர் நேர்ந்துகா குத்தனம்பால்
வெஞ்சுசிநேர் பஞ்சானார் வெந்து.

எச்சகோபன் = எக்கியகோபனும், சுதக்கன் = சுதக்கனும், ஏன் அக்கினி கேது = வலிமையுடைய அக்கினிகேதுவும், துச்சன் இரச்சமிகேது = கெட்டவனான இரச்சமிகேது என்ற, பெயர்கொள் = பேரைக்கொண்ட, நச்சு நேர் நெஞ்சன் = விடத்தையொத்த மனமுடையோனும், எனும் நால்வர் = என்று சொல்லப்பட்ட நான்கரக்கர், அமர்நேர்ந்து = போர்புரிந்து, காகுத்தன் அம்பால் வெந்து = இராமபிரானது பாணத்தினால் தீந்து, வெம் சுசி நேர் பஞ்சு ஆனார் = கொடிய நெருப்பிற்பட்ட பஞ்சினுக் கொப்பாயினார்.

நெருப்பிற்பட்ட பஞ்சு உருவழிதல்போல் அந்நான்கரக்கரும் உருவழிந்தனர் என்பதாம். துச்சன்ணிரச்சமி - ணகரமெய் விரித்தல.

19. ஆற்றற் றுவித னசனிப் பிரபனெனுஞ்
சீற்றத் தரக்கனுட றேய்த்திட்டா — னேற்றமிகுந்
தாவிச் சுசேணனெனும் வானரன்வித் துன்மாலி
யாவிக்கு விண்ணளித்தா னால்.

ஆற்றல் துவிதன் = வலிமையுடைய துவிதனென்னும் வானரன், அசனிப்பிரபன் எனும் = அசனிப்பிரபனென்ற, சீற்றத்து அரக்கன் உடல் = கோபத்

தையுடைய அரக்கனது உடலை, தேய்த்திட்டான் = அழித்தனன், சுசேணன் எனும் வானரன் = சுசேணனென்னும் வானரன், அமரில் ஏற்று = போரில் எதிர்த்து, வாவி = தாவி, வித்துன்மாலி = வித்துன்மாலியென்னும் அரக்கனது, ஆவிக்கு விண் அளித்தான் = உயிருக்கு வீரசுவர்க்கத்தைக் கொடுத்தனன். (கொன்றனன் என்றபடி) ஆல் - அசைநிலை.

20. இவ்வணமே தாசரதி பெற்றுசிலை யாற்குரங்கா
லவ்வரக்க மாரை யடர்விறலை — யிவ்வுலகி
னப்புறத்தார்க் குஞ்சென் றறைவான்போ லக்குடபா
லப்புளினன் வீழ்ந்தகன்றா னண்டு.

இவ்வணம் ஏ தாசரதி = இவ்விதமாய் இராமபிரான், ஏற்று சிலையால் குரங்கால் = நாணேற்றிய வில்லாலும் வானரசேனைகளாலும், அ அரக்கமாரை அடர் விறலை = அந்த அரக்கர்களைக்கொன்ற பராக்கிரமத்தை, இனன் ஆண்டு = சூரியனானவன் அப்பொழுது, இ உலகின் அப்புறத்தார்க்கும் = இந்த உலகினுக்கு அப்புறத்திலுள்ளவர்களுக்கும், சென்று அறைவான்போல = சொல்லப்போவான்போல், குடபால அப்புள் வீழ்ந்து அகன்றான் = மேல்கடலில் மூழ்கிச் சென்றனன்.

ஏ - அசைநிலை. அப்புறத்தார்-பூவுலகிற்குப் புறம்பாயுள்ள உலகத்தார். உம்மை இறந்தது தழீஇயது. அடர் - வினைத்தொகை. இனன் வீழ்ந்தகன்றான் எ - து சூரியன் அத்தமித்தனன் என்றதாம். தற்குறிப்பேற்றவணி.

21. கங்குலிலி ராவணிதான் காயுகளத்தில் வந்தெதிர்ப்ப
வங்கதன்போந் தன்னா னடுகணையாம் — பொங்குபெயன்
மாற்றிக் கொடிஞ்சி மணித்தேர் துகளாக்கிக்
காற்றிற் பறக்குவித்தான் கண்டு.

கங்குலில் இராவணி = அன்றிரவில் இந்திரசித்து, காய் களத்தில் வந்து எதிர்ப்ப = கோபிக்கும் போர்க்களத்தில் வந்தெதிர்த்திட, அங்கதன் கண்டு போந்து = அங்கதனானவன் நோக்கிப்புகுந்து, அன்னான் அடு கணை ஆம் = அவனது கொல்லுஞ்செயலுள்ள அம்புகளாகிய, பொங்கு பெயல் மாற்றி = மிகுந்த மழையை மாற்றி, கொடிஞ்சி மணி தேர் = (அவனது) மேல்மொட்டையுடைய அழகிய தேரை, துகள் ஆக்கி = பொடியாக்கி, காற்றில் பறக்குவித்தான் = காற்றில் பறக்கும்படிசெய்தனன்.

தான் - அசைநிலை. இராவணி- இராவணன்புத்திரன். பறக்குவித்தான்- பிறவினை.

22. வையமழி வுற்றிடினும் வாளொளிந் திராவணியை
வெய்யவர வக்கணைதம் மெய்ப்பிணிப்ப — வையமெலாஞ்
சோராது காக்குமிறை சோர்ந்துகிடந் தான்களத்திற்
றீராருந் தம்பியொடுஞ் சாய்ந்து.

வையம் அழிவுற்றிடலும்=தேர் உடைந்தவுடன், இராவணி வான் ஒளிந்து=இந்திரசித்து ஆகாயத்தில் ஒளிந்துநின்றுகொண்டு, எய் வெய்ய அரவக்கணை=ஏவிய கொடிய நாகாஸ்திரமானது, தம் மெய் பிணிப்ப=தம்முடைய உடம்பைக் கட்ட, வையம் எலாம் சோராது காக்கும் இறை=உலகங்களையெல்லாம் சோர்வில்லாமல் காக்கின்ற இராமபிரான், தார் ஆரும் தம்பி ஒடும்=வெற்றிமாலைபூண்ட இலக்குமணனுடன், சாய்ந்து சோர்ந்து களத்தில் கிடந்தான்=(யுத்தபூமியில) விழுந்து மூர்ச்சித்துக்கிடந்தனன்.

தம் எ-து இலக்குமணனையும் உளப்படுத்திய தன்மைப்பன்மைப்பெயர். உம்மை எதிரதுதழீஇயது. வையமெலாஞ்சோராது காக்குமிறை சோர்ந்து கிடந்தான் எ-தில முரணவிளைந்தழி வணி தோன்றுகின்றது.

23. செம்ம லிருவர் செயனோக்கிச் சூரன்சே
யிம்மெனுமுன் னேகி யிராக்கதர்கோன் — வெம்மகனைக்
கைவசத்தி னிற்கவர்மின் கண்டெனச்சே னாதிபரீ
ரைவர்தமை விட்டா னழன்று.

சூரன்சேய்=சூரியபுத்திரனான சுக்கிரீவன், செம்மல் இருவர் செயல் நோக்கி=இராச குமாரராகிய இராமலட்சுமணரது செய்கையைக் கண்டு, சேனாதிபர் ஈர் ஐவர் தமை=சேனாபதிகளாகிய பதின்மரை (நோக்கி), இம் எனும் முன் ஏகி=(நீவிர்) இம் என்னும் பொழுதிற்குள் சென்று, இராக்கதர் கோன் வெம் மகனை=இராக்கதர்தலைவனான இராவணனது கொடிய மகனாகிய இந்திரசித்தை, கண்டு கைவசத்தினில கவர்மின் என=தேடிக்கண்டு கையினிடமாப்பிடியுங்கள் என்றுசொல்லி, அழன்று=கோபங்கொண்டு, விட்டான்=அனுப்பினன்.

இம் எ-து விரைவுக் குறிப்பிடைச்சொல்.

24. தேண்டியநு மான்முதலோர் சேணில் விரைந்துபுகக்
காண்டலுமி ராவணிசெங் கட்பொறிகண் — மூண்டிடக்கை
விற்றொடுத்துக் கூர்ங்கணையால் வீழ்த்தித்தன் றந்தைபா
லுற்றனைத்துஞ் சொற்றா னுவந்து.

அநுமான்முதலோர்=அநுமன்முதலிய சேனாபதிகள், சேணில் விரைந்து தேண்டி புக=ஆகாயத்தில விரைந்து தேடிப்புக, இராவணி காண்டலும் செம் கண் பொறிகள் மூண்டிட=இந்திரசித்து (அவரைப்) பார்த்ததும் சிவந்த கண்களினின்று தீப்பொறிகள் மிகக்கொட்ட, கைவில் தொடுத்து=கையிலுள்ளவில்லில் பிரயோகித்து, கூர் கணையால்=கூரிய பாணங்களினால், வீழ்த்தி=அவரைக்கீழ்த்தள்ளி, தன் தந்தைபால உற்று=தனது தகப்பனாகிய இராவணனிடம் அடைந்து, அனைத்தும்=அங்கு நடந்த [illegible]யெல்லாம், உவந்து சொற்றான்=களித்துச்சொல்லினன்.

காண்டலும் - உம் ஈற்று வினையெச்சம்; காண் பகுதி, உம் விகுதி, துஅல்சாரியைகள். தேண்டி - விரித்தல் விகாரம்.

25. காதலனைத் தந்தைதழீஇக் காவற்சீ தைக்குத்தன்
காதலன்முன் னோர்செயலைக் காட்டுகெனப்—பாதகன்றுன்
பேய்ந்தாளைப் புட்பகத்தி லேற்றிவந் தக்களத்திற்
சாய்ந்தாரைக் காட்டினான் சார்ந்து.

காதலனை தந்தை தழீஇ=புத்திரனாகிய இந்திரசித்தைப் பிதாவாகிய இராவணன் தழுவிக்கொண்டு, காவல சீதைக்கு = சிறையிலிருக்கின்ற சீதைக்கு,தன் காதலன்முன்னோர் = அவளது கணவன்முதலியோரது,செயலை காட்டுக என = வீழ்ந்துகிடக்கின்ற செய்கையைக் காட்டக்கடவை என்று சொல்ல, பாதகன் துன்பு ஏய்ந்தாளை - பாவியாகிய அவ்விந்திரசித்து துன்பமடைந்தவளாகிய சீதையை, புட்பகத்தில ஏற்றிவந்து=புட்பகவிமானத்திலேற்றிக்கொண்டு வந்து, அ களத்தில சார்ந்து=அப்போர்க்களம் அடைந்து, சாய்ந்தாரை காட்டினன் = சோர்ந்துகிடக்கின்ற இராமலட்சுமணரைக் காட்டினன்.

புட்பகம் - குபேரனிடத்திருந்து இராவணனால் கிரகிக்கப்பட்ட ஒரு விமானம். துன்பேய்ந்தாள், சாய்ந்தார் - வினையாலணைந்தபெயர்கள்.

26, சீதையவர்க் கண்டுமனந் தீயின் மெழுகாக
மாது திரிசடையு மங்கலியை—மீதுயரிம்
மானஞ் சுமவாதான் மாய்ந்திலர்நின் கோன்முதலோர்
நீநஞ் சழுங்கலென்று னேர்ந்து.

சீதை அவர் கண்டு=சீதாபிராட்டி அங்குச சோர்ந்துகிடக்கின்ற இராமலட்சுமணரைப்பார்த்து, மனம் தீயின் மெழுகு ஆக=மனமானது தீயிற்பட்டமெழுகுபோல் நைந்துருகாநிற்க, மாது திரிசடை=திரிசடையென்னும் பெண்ணானவள்,நேர்ந்து=(சீதையை)நோக்கி, மீது உயர் இ மானம்=மேலுயர்ந்துசெல்லும் இந்த விமானம, அமங்கலியை சுமவாது ஆல்=மங்கலமிழந்த விதவையைச் சுமக்காது அதனால்,நின்கோன் முதலோர் மாய்ந்திலர்=உனது நாயகன்முதலியோர் இறந்திலர், நீ நஞ்சு அழுங்கல் என்றுள்=நீ நொந்து வருந்தாதொழிகவெனச் சொல்லித் தேற்றினாள்.

நைந்து - நஞ்சு; போலி. அழுங்கல் - எதிர்மறையேவல் வினைமுற்று.

27, தேருற்ற சாலகியைத் தீயவர்மீட் டும்பிண்டி
சேருற்ற காவிற் சிறைவைத்தா—ரோர்வுற்ற
வீடணன்று னேக்கியொளி வீரர் முகத்துளதா
ளுடுயிருண் டென்றுனயந்து

தேர் உற்ற சானகியை=(இரிசடையின் சொல்லால்) தேறிய சீதாபிராட்டியை, தீயவர் மீட்டும்=கொடியஇராக்கதர் மறுபடியும் கொண்டுபோய், பிண்டி சேர் உற்ற காவில்=அசோகமரங்கள் சேர்ந்தவனத்தில், சிறைவைத்தார்=காவலில்வைத்தார், (பின்பு), ஓர்வு உற்ற வீடணன் நயந்து நோக்கி=அறிவையுடைய விபீடணன் அமர்ந்து பார்த்து, வீரர்முகத்து ஒளி உளதால்=வீரராகிய இராமலட்சுமணர்களுடைய முகத்தில் ஒளி இருத்தலால், நாடு உயிர் உண்டு என்றான்=(சரீரத்தில) நாடிய உயிர் இருக்கின்றது என்று சொல்லினன்.

தான் - அசைநிலை. மீட்டும் - உம்மை இறந்தது தழீஇயது.

28. அன்னபொழுதத்தம்மை யாற்றறத்தி னாயபயன்
முன்னருறீஇ நின்றாங்கு மொய்க்களம்வீழ் — மன்னவரின்
முன்னாய்க் கலுழன்வர மொய்யறமில் லான்பொருள்போ
லந்நாகக் கட்டற்றதால்.

அன்னபொழுதத்து=அப்பொழுது, மொய் களம் வீழ் மன்னவரின்=போர்க்களத்தில் வீழ்ந்துகிடக்கின்ற இராமலட்சுமணர்களின், முன் ஆய்=முன்னாகி, அம்மை ஆற்று அறத்தின் ஆய பயன்=முற்பிறப்பில் (ஒருவன்) செய்த தருமத்தின் பலன், முன்னர் உறீஇ நின்றாங்கு=(இப்பிறப்பில) முன்வந்து நின்றாற்போல, கலுழன் வர=கருடனானவன் வருதலும், மொய் அறம் இல்லான் பொருள்போல்=நெருங்கிய தருமசெயல் இல்லாதவனது பொருள் அழிதலபோல, அ நாகம கட்டு அற்றது=அவ்விந்திரசித்துவினால் கட்டப்பட்ட நாகாஸ்திரத்தின் கட்டானது அற்றுவிட்டது.

ஆல் - அசை. பொழுதத்து அத்துச்சாரியை. இது உவமையணி. அறப்பயன் உவமானம், கலுழன் உவமேயம. அறமில்லான்பொருள் உவமானம், நாகக்கட்டு உவமேயம். வருதலும், நீங்கலும் பொதுத்தன்மைகள்.

29. நாகபந் தத்திற்றீர் நம்பிமார் நஞ்சொருவி
னாகபந் தத்திற்றீர் நாண்மதிபோற் — சோகபந்த
மற்றெழுந்தா ரன்னார்மெய் யஞ்சிறையா னீவிமுன்றாய்க்
குற்றமுநீக் கானதன்றோ வாங்கு.

நாகம் பந்தத்தில் தீர் நம்பிமார்=நாகாஸ்திரத்தின் கட்டிலிருந்து நீங்கிய இராமலட்சுமணர்கள், நஞ்சு ஒருவு இல்=விடம் நீங்குதலில்லாத, நாகம் பந்தத்தில்=இராகு கேது என்னும் பாம்புகளால் கவ்வப்பட்ட கட்டினின்று, தீர் நாள் மதி போல்=நீங்கிய புதிய சந்திரனைப்போல, சோகம் பந்தம் அற்று எழுந்தார்=மயக்கசம்பந்தம்நீங்கிஎழுந்தனர், அன்னார்மெய்=அவர்களுடைய திருமேனிகளை, முன் உற்ற தாய்க்கு அற்றம் நீக்கினதால்=முன்பு தேவருலகிற்சென்று தன் தாயாகிய விநதைக்கு அடிமைக்கொண்டு

வந்து கொடுத்தோனான கருடன், அம் சிறையால் வீவி ஊங்கு அகன்றான்=அழகிய சிறைகளால தடவிவிட்டு மேற்பறந்து சென்றனன்.

தாய்க்குஉற்றுஅமுதீந்தான் எ-து கலுழன் முன்பு தன்தாய்க்குச சக்களத்திரியாகிய கத்துருவை வெல்லத் தேவாமிருதத்தைக் கொண்டுவந்து முன்புவைத்ததாம. இராகுகேதுஎன்னும் பாம்புருவக்கிரகங்கள் சந்திர சூரியரைப்பிடித்தலைக் கிரகணமெனச் சொலலுவர்; அக்கிரகணத்தினின்று நீங்கிய சந்திரனைப்போல் நாகாஸ்திரக்கட்டினின்று இராமலட்சுமணர் நீங்கி விளங்கினர் என்க.

30. பின்னர்த் திகழ்குமரர் போர்வில்லி னாணொலியு
மன்ன கவித்தலைவ ரார்ப்பொலியு—மன்னு
மொருபான் முகத்தாற் குருமேற் றொலியா
யிருபான் செவியுற்ற தே.

பின்னர் திகழ் குமரர்=பின்பு விளக்கமுற்ற இராமலட்சுமணரது, போர் வில்லின் நாண் ஒலியும=பெரிய விற்களின் நாணொலியும், அன்ன கவி தலைவர்=அந்த வானரசேநாபதிகளின், ஆர்ப்பு ஒலியும்=கர்ச்சனையொலியும், (ஆகிய பேரொலி) மன்னும் ஒருபான் முகத்தாற்கு=பொருந்திய பத்துமுகங்களையுடைய இராவணனுக்கு, உருமேறு ஒலி ஆய்=இடியாகிய ஒலிக்கொப்பாகி, இருபான்செவி உற்றது ஏ=இருபதுசெவிகளிலும் புகுந்தது.

ஏகாரம - ஈற்றசை.

31. அச்சும்மை கேட்டலுந்தூ மாக்கனையத் தானையின்மே
னச்சும்போ ருக்குய்ப்ப நாடியவத்—துச்சன்றன்
காலிரண்டைப் பற்றிப்பு மண் கண்ணெற்றி னானிறைவன்
காலிரண்டைத் தாழ்காலின் கால்.

அ சும்மை கேட்டலும்=(இராவணன்) அநத ஒலியைக் கேட்டவுடன், தூமாக்கனை=தூமாக்கனென்னும் அரக்கனை, அ தானையின்மேல் நச்சும்போருக்கு உய்ப்ப=அவ்வானரசேனையின்மேல் விரும்பிச்செய்யும் யுத்தத்திற்குச் செலுத்த, நாடிய அ துச்சன் கால் இரண்டை=எதிர்ந்த கெட்டவனாகிய அவ்வரக்கனது இரண்டு கால்களையும், இறைவன் கால் இரண்டை தாழ் காலின் கால்=இராமபிரானது இரண்டுபாதங்களையும் வணங்குகின்ற வாயுபுத்திரனாகிய அநுமன், பற்றுபு மண் [illegible]=பிடித்துப் பூமியிலடித்து, எற்றினான்=மோதினான்.

தல் — அசை நிலை. தூமாக்கன்=புகையெழும்புகின்ற கண்ணையுடையான். உய்ப்ப என்னும் வினையெச்சம் நாடிய என்னும் பெயரெச்சங் கொண்டது.

32. பின்வச்சி ரத்தெயிற்றான் பேரமராற் றத்துறக்க
மன்வன்மைச் சேய்மைந்தன் வாவியவன்—சென்னிதனை
யன்னான்வா ளேகொண் டடர்த்தான்கே டுற்றிடுகா
லொன்னார் படைவேண்டு மோ.

பின் வச்சிரத்து எயிற்றான் = பின்பு வச்சிரதந்தன் என்னும் அரக்கன், பேர் அமர் ஆற்ற = (வந்தெதிர்த்துட) பெரிய போரைச் செய்ய, துறக்கம் மன் வன்மை சேய = சுவர்க்கத்தரசனாகிய இந்திரனது வலிய மகனான வாலியின், மைந்தன் = குமாரனான அங்கதன், வாவி = தாவி, அவன் சென்னிதனை = அவ்வரக்கனது தலையை, அன்னான் வாளே கொண்டு அடர்த்தான் = அவனது கைவாளையேகொண்டு கொன்றனன்; கேடு உற்றிடுகால் = (ஒருவனுக்கு) அழியும்விதி வரும்பொழுது, ஒன்னார் படை வேண்டுமோ = (அவனைக் கொல்லப்) பகைவரது ஆயுதங்களும் வேண்டுமோ? (வேண்டாவாம் அவன் படையே அவனையழிக்குங்கருவியாம் என்றபடி.)

தன் அசைநிலை. ஏகாரம் தேற்றம். காலம்—அம் கெட்டது. வச்சிரதந்தன்—வயிரம்போன்ற பல்லுள்ளவன். இராவணசங்காரத்தின் பொருட்டுத் தேவர்கள் கூடி ஆலோசிக்கையில் இந்திரன் வாலியாக அவதரிக்கின்றேனென்றனனாதலின் வாலியை இந்திரன்மகனென்றது.

33. அஞ்சனைதன் சேயோ டகம்பனன்பின் வந்தேற்று
வெஞ்சமரிற் றோற்று விரைஇப்புக்கி—ரஞ்சுமுகன்
பாற்குறுகி யாகவத்தின் பண்புரைக்குங் காலையிற்கீழ்
பாற்கடற்றோன் றிற்றான் பகல்.

பின் = பின்பு, அகம்பனன் வந்து = அகம்பனனென்னும் அரக்கன் வந்து, அஞ்சனைசேயோடு ஏற்று = அஞ்சனாதேவியின் புத்திரனான அநுமானுடன் எதிர்த்து, வெம் சமரில் தோற்று = கொடிய யுத்தத்தில் தோல்வியடைந்து, ஈரஞ்சுமுகன்பால் = பத்துமுகத்தையுடைய இராவணனிடத்தில், விரைஇ குறுகி புக்கு = விரைந்துகிட்டிப்புகுந்து, ஆகவத்தின் பண்பு உரைக்கும் காலையில் = அந்தப்போரினது தன்மையைச் சொல்லியபொழுது, பகல் கீழ்பால் கடல் தோன்றிற்றான் = சூரியன் கீழ்த்திசைக்கடலில் உதித்தனன்.

தான் அசைநிலை. விரைந்து என்னுமெச்சம் விரைஇ என அளபெடுத்து இன்னிசை நிறைக்க வந்தது. இரண்டு எ - து ஈர் [illegible] விகாரப்பட்டது.

34. கண்ணின்கட் டப்பொறிகள் காலப் பிரகத்தன்
மண்ணின்கட் சேயெழுந் தெதிர்ப்ப—வி[illegible]
[illegible]புவனைக் குத்திச் சமர்க்களத்து வீழ்த்தின[illegible]
[illegible]விடை நீலன் மதித்து.

பிரகத்தன்=பிரகத்தனென்னும் அரக்கன், கண்ணின்கண் தீ பொறிகள் கால=கண்களினின்றும தீப்பொறிகள் கொட்டவும், மண்ணின்கண் தூசி எழ=பூமியினின்றும் தூசிகள் எழும்பவும், வந்து எதிர்ப்ப=வந்தெதிர்த்துப் போர்புரிய, நீலன்=நீலனென்னும் வானரன், அவனை கீழ்வாயிலிடை மறித்து=(அவனைக்) கீழைவாயிலி[illegible]தடுத்து, விண்ணின்கண் தாய குத்தி=ஆகாயத்தில் தாவிக் குத்தி, சமர் களத்து வீழ்த்தினன்=போர்க் களத்தில் தள்ளினன.

மறித்துக் குத்தி வீழ்த்தினன் என முடிக்க. பிரகத்தன்=இராவணன் மந்திரிகளிலொருவன். மணணின்கண் ஐந்தனுருபுமயக்கம.

35. தம்படைக ளொடுபிசா சந்திரி சிரரகம
கம்பனதி கும்பதி காயனுடன்—கும்பனரா
ந்தகனி ராவணிதே வாந்தகன்ம கோதரனு
முந்தமருக் கேகினர் மொய்த்து.

பிசாசன்=பிசாசனும், திரிசிரா=திரிசிராளன்பவனும், அகம்பனன்=அகம்பனனும், நிகும்பன்=நிகும்பனும், அதிகாயன்உடன் கும்பன்=அதிகாயனென்பானுடன் கும்பனும், நரர் அந்தகன்=நராந்தகனும், இராவணி=இந்திரசித்துவும், தேவாந்தகன்=தேவாந்தகனும், மகோதரனும்=மகோதரனுமாகிய அரக்கர்கள், தம்படைகள் ஒடு மொய்த்து=தமது சேனைகளோடு நெருங்கி, அமருக்கு=(இராமபிரான்சேனையோடுசெய்யும்) போருக்கு, முந்து ஏகினர்=முதலிற்சென்றூர்கள்.

திரிசிரா - மூன்றுதலைகளையுடைய ஓரரக்கன். உம்மை - எண்ணும்மை.

36. விண்ணாடு மண்ணாடா வெம்படைக்காற் றூள்புதைப்ப
மண்ணாடு பேரிகைசெல் வாயடைப்ப—வுள்ளாடி
வெஞ்சமனுங் கண்புதைப்ப மேவினன்பன் மாத்தேரூர்ந்
தஞ்சிருமு கத்தா னமர்க்கு.

அஞ்சு இரு முகத்தான்=பத்துமுகத்தையுடைய இராவணன், விண் நாடும் மண் நாடா=விண்ணுலகும பூவுலகுபோலாம்படி, வெம் படை கால் தூள் புதைப்ப=கொடிய சேனைகளின் கால்களினின்றெழுந்த தூசிகள் சென்று மூடிக்கொள்ளவும், மண் நாடு பேரிகை செல் வாய அடைப்ப=திடைத்தல் பொருந்திய முரசொலியானது மேகத்தின் வாயொலியை அடைக்கவும், வெம்சமனும்=கொடிய இயமனும், உள்நாடி கண்புதைப்ப=மனத்தில் ஆராய்ந்து (பயந்து) கண்களைமூடிக்கொள்ளவும, பல்மாதேர்ஊர்ந்து=பலகுதிரைகள்பூண்ட இரதத்தைச்செலுத்தி, அமர்க்கு மேவினன்=போர் புரிதற்குப் புகுந்தனன்.

அஞ்சிரண்டு - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. இரண்டுமுகம் "இரண்டனொற்றுயிரேக வுவ்வருமே" என்றவிதியால் இருமுகம்என்றுயிற்று.

உம்மைகள் - உயர்வுசிறப்பு. நாடா என்றதில் ஆக என்னும் வினையெச்சத் திறுதொக்கது.

37. போர்க்களத்தி லிலங்கையிறை போந்துவரி விற்குனித்துக்
கார்க்கட லுண் மைபோற் கணைமாரி — தூர்க்கவெதிர்
நின்றாஞ்ச நேயனவ னீள்வலிமுன் காண்பமியா
மென்றார்த்துக் கூறுவா னேற்று.

இலங்கை இறை=இராவணன், போர்க்களத்து போந்து=யுத்த களத்திற்புகுந்து, வரி வில் குனித்து—வரிக்கட்டுள்ள வில்லை வளைத்து, கார் கடல் உண் மைபோல் கணைமாரி தூர்க்க—கருமையாகிய கடனீரையுண்ட மேகம்போல் பாணவருடத்தைப் பொழிதலும், ஆஞ்சநேயன் எதிர்நின்று—அநுமான் எதிரில்நின்று, யாம முன் அவன் நீள் வலி காண்பம் என்று—நாம முன்பு அவனது மிக்கவலிமையைப பார்ப்போம் என்றுகருதி, ஏற்று ஆர்த்து கூறுவான்—எதிர்த்துக் கர்ச்சித்து (ஒன்றைச) சொல்வானாயினன்.

உவமையணி. மை உவமானம், இலங்கையிறை உவமேயம், மாரிதூர்த்தல் பொதுத்தன்மை. காணபம் - தன்மைப்பன்மை எதிர்கால வினைமுற்று.

38. நீடுசித வெற்பெடுத்தாய் நின்றோள் வலிகாண்பான்
கூடினனென் மார்பினிடைக் குத்தென்ன — வீடரக்கர்
கோன்முனநீ யென்மார்பிற் குத்தெனனக் காலின்மகன்
றன்முனிவிற் குத்தினான் றாய்.

காலின்மகன்—வாயுவின் புத்திரனான அநுமான், நீடு சிதம் வெற்பு எடுத்தாய்—நீண்ட வெண்மையாகிய கைலைமலையை எடுத்தஇராவணா, நின்தோள் வலிகாணபான் கூடினன்—உன்புயவன்மையை அறிதற்பொருட்டுச் சந்தித்தேன், என்மார்பினிடை குத்து என்ன=என்மார்பில (நீமுதலில்) குத்துவாயென்றுசொல்ல, வீடு அரக்கர்கோன்—அழியுமியல்புள்ள இராவணன், முன்னம் நீ என் மார்பில குத்து என்ன=முதலில் நீ என்மார்பில் குத்துவாய் என்று சொல்ல, (அநுமன்) தாய் முனிவில குத்தினான்—தாவிக் கோபத்துடன்குத்தினான்.

தான் - அசைநிலை. காண்பான் - வினையெச்சம்.

39. மாருதிமுன் மோதுதலு மாழ்கியுணர் வற்றுப்பின்
றேறுதலுற் றன்னான் றிறல்வியப்ப — மாருதிதா
னென்மார்பி னின்முறைகுத் தென்னத்தீ யோன்மன்பின்
முன்மாறக் குத்தினான் மொய்த்து.

மாருதி—அநுமான், முன் மோதுதலும்—முதலில் (இராவணன்மார்பில்) குத்த, அன்னான்—அவ்விராவணன், மாழ்கி—வருந்தி, உணர்வு அற்று—அறிவுமயங்கி, பின்தேறுதல் உற்று=பின்பு தெளிவடைந்து, திறல்வியப்ப=

அநுமானது வலிமையை வியந்துசொல்ல, மாருதி=அநுமான், என் மார்பில் நின் முறை குத்து என்ன=எனது மார்பில உன்முறைமைப்படி குத்துவாய் என்றுசொல்ல, தீயோன்=கொடியோனாகிய இராவணன், மொய்த்து=நெருங்கி, மண் பின் முன் மாற=பூமிகீழ்மேலாய் மாறும்படி, குத்தினான்=(அநுமன்மார்பில்) குத்தினன்.

மாருதி - வாயுபுத்திரன். மோதுதலும்-செய்தென்வாய்பாடுபற்றி வந்த உம்மீற்றுவினையெச்சம். மண் பின் முன் மாற எ-து குத்தும் அதிர்ச்சியால பூமியும் தடுமாறிப் புரளும்படி என்க. தான் அசைநிலை.

40. செங்குருதி சோரத் திகைத்தநுமன் வீழ்ந்தயர
வங்கெதிர்ந்த நீலனையும் பால்வீழ்த்திப்—பொங்குகவிக்
கேற்றதலை வர்ச்சாய்த் திலக்குவன்றன் னோடுசம
ரேற்றனனி லங்கைக் கிறை.

அநுமன்=அநுமானனவன், செம் குருதி சோர திகைத்து=செம்மையாகிய இரத்தம் கொட்ட மயங்கி, வீழ்ந்து அயர=கீழ்வீழ்ந்து சோர்ந்துகிடக்க, அங்கு எதிர்ந்த நீலனை=அவ்விடத்து எதிர்த்துப போர்செய்த நீலன் என்னும் வானரனை, இலங்கைக்கு இறை=இராவணன், அம்பால் வீழ்த்தி=அம்பினால கீழ்த்தள்ளி, பொங்குகவிக்கு ஏற்ற தலைவர் சாய்த்து=மிகுந்த வானரங்களுக்குப பொருந்திய தலைவர்களைக் கீழ்த்தள்ளி, இலக்குவனோடு=இலக்குமணனுடன், சமர் ஏற்றனன்=போர்செய்தனன்.

தலைவர்ச்சாய்த்து எ-து "ஆவியரமுன்வன்மை மிகா" என்னும் விதிபெறாது "இயல்பின்விகாரமும் விகாரத்தியல்பும்" என்னும் விதிப்படி இயல்பில விகாரமாயிற்று. அயரஎன்னும எச்சம் எதிர்ந்த என்னும பெயரெச்சங்கொண்டது.

41. வில்லினிடு பல்கணையால் வெல்வதரி தாயிவனை
வில்லினிலம் மூவரெதிர் மேவிடினும்—வெல்லவொணா
தென்றுவியந் தொள்வே லெறிந்திலக்கு வன்மார்பக்
குன்றுபிளந் தானிருதர் கோன்.

நிருதர்கோன்=இராக்கதர்களுக்குத் தலைவனாகிய இராவணனானவன், வில்லின்இடு பலகணையால்=வில்லினாலெய்யப்பட்ட பலபாணங்களினால், வெல்வது அரிதாய்=வெல்லல் அரிதாகி, வில்லினில=விற்போரில், அம்மூவர் எதிர் மேவிடினும்=அந்தத்திரிமூர்த்திகளும் எதிர்த்துநின்றாலும், இவனை வெல்ல ஒண்ணாது என்று வியந்து=இவ்விலக்குமணனை வெல்லமுடியாது என்று வியப்புற்று, ஒள்வேல் எறிந்து=ஒள்ளியவேலாயுதத்தைஎறிந்து, இலக்குவன் குன்று மார்பம் பிளந்தான்=இலக்குமணனது மலைபோலுந்திண்ணிய மார்பைப் பிளந்தனன்.

மூவர் - பிரமன், விட்டுணு, உருத்திரன். மேவிடினும் - உம்மீற்று வினையெச்சம். ஒண்ணாது எதிர்மறைக் குறிப்புவினைமுற்று.

42. மெய்சோர்ந் தடுகளத்தில் வீழ்ந்தானைத் தூக்கொணாக்
கைசோர்ந்து நின்றிட்ட கள்வன்முகம்—பெய்சோரி
பொங்கவநு மான்குத்திப் போர்வில் லிளவலைக்கொண்
டங்கமலன் பாலுய்த்தா னால்.

மெய்சோர்ந்து அடுகளத்தில் வீழ்ந்தானை=உடல்சோர்ந்து போர்க்களத்தில் விழுந்துகிடக்கின்ற இலக்குமணனை, தூக்கவொண்ணாது கைசோர்ந்து நின்றிட்ட=தூக்கமுடியாது கைகள் எய்த்துநின்ற கள்வன் முகம் பெய் சோரி பொங்க=திருடனாகிய இராவணனது முகத்தில் கொட்டும் இரத்தம் பெருகும்படி, அநுமான் குத்தி=அநுமானென்பவன் கையாற்புடைத்து, போர்வில் இளவலைக் கொண்டு=போர்செய்யும் வில்லைத்தரித்த இலக்குமணனைத் தூக்கிக்கொண்டு, அங்கு அமலன்பால் உய்த்தான்=அவ்விடத்தில் இராமபிரானிடத்துச் சேர்த்தனன்.

ஆல் - அசைநிலை. வீழ்ந்தான் - வினையாலணையும் பெயர். தூக்கொணா - தூக்க என்னும் வினையெச்சத்திறுதியும், ஒண்ணாது என்னும் ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சத்திறுதியும் கெட்டன.

43. அக்கா லிளவ லயர்வொரீஇ யண்ணலடி
முக்கால் வணங்கிநிற்ப மூத்தவன்மொய்ப்—புக்கா
னுடன்மே லுயிரேற லொப்பவநு மான்மே
லடன்மேவ வேறி யமர்க்கு.

அக்கால் இளவல் அயர்வு ஒரீஇ=அப்பொழுது இலக்குமணன் சோர்வு நீங்கி, அண்ணல் அடி முக்கால் வணங்கிநிற்ப=இராமபிரானது திருவடிகளை மும்முறை வணங்கிநிற்க, மூத்தவன்=மூத்தவனாகிய இராமபிரான், உடல்மேல் உயிர் ஏறல் ஒப்ப=மெய்யெழுத்தின்மேல் உயிரெழுத்துவந்து ஏறும் இயல்புபோல, அநுமான் மேல் அடல் மேவ ஏறி=அநுமன்மீது வலிமை பொருந்த ஏறிக்கொண்டு, அமர்க்கு மொய் புக்கான்=போர்செய்தற்பொருட்டு யுத்தகளத்தில் புகுந்தான்.

ஒருவி என்னும் வினையெச்சம் ஒரீஇ என அளபெடுத்து இன்னிசைநிறைக் கவந்தது. "உடன்மேலுயிர்வந் தொன்றுவதியல்பே" என்ற இலக்கணப்படி மெய்யெழுத்தின்மேல் உயிரெழுத்து ஏறுதலைப்போல அநுமன்மீது இராமபிரான் ஏறினான் என்றதனால் இராமபிரான் எவர்க்கும் உயிர்போன்றவன் என்பதும், அநுமான் இராமபிரானுக்கு உடல்போன்றவனென்பதும் பெற்றாம்.

44. காரரக்கன் வெம்போர்க் கரிகள்கரி யாயினவன்
றேரனைத்தும் பேய்த்தேராய்த் தீர்ந்தனவே—நேரெதிர்த்த
வாசிகளவ் வானுலக வாசிகளாய்ப் போந்தனவாற்
றாசரதி யெய்கணையாற் சாய்ந்து.

தாசரதி எய் கணையால் சாய்ந்து=இராமபிரான் ஏவிய அம்புகளினால் மடிந்து, கார் அரக்கன்=கரிய இராவணனது, வெம் போர் கரிகள் கரி ஆயின=கொடியபோர்செய்யும் யானைகள் கரிந்தனவாயின, வல் தேர் அனைத்தும் பேய்த்தேர் ஆய் தீர்ந்தன=வலியஇரதங்களெல்லாம் கானல்நீருக்கொப்பாகி உருவற்றழிந்தன, நேர் எதிர்த்த வாசிகள்=நேரில எதிர்த்துப் போர்செய்த குதிரைகள், அ வான் உலகம் வாசிகள் ஆய் போந்தன=அந்தவீரசுவர்க்கத்தில் வாசஞ்செய்கின்றனவாய்ப் புகுந்தன.

பேய்த்தேர் - கானல்நீர்; அது வெய்யிலால் நீர்போலச் செய்மையிலுள்ளார்க்குக் காணப்படுந் தோற்றமேயன்றி உருவில்லதாம். கரி - கரி, தேர் - தேர், வாசிகள் - வாசிகளென்பன மடக்குகள். ஏகாரம் - ஈற்றசை.

45. பாறுமிலங் கைக்கோன் பதாதியுடற் றாதுக்க
ளாறும் பகுபதச்சீ ரன்னவியவே—கூறும்
பகாப்பதமே போன்று பகைத்தார் படையாற்
பகாப்பரமன் றொட்டசரம் பாய்ந்து.

கூறும்=(நூலாசிரியர்கள்) சொல்கின்ற, பகாப்பதமே போன்று=பகாப்பதத்தை ஒத்து, பகைத்தார் படையால்=எதிர்த்த பகைவரது ஆயுதங்களால், பகா=பிளக்கப்படாததாகிய, பரமன் றொட்ட=மேலான இராமபிரானால் தொடுக்கப்பட்ட, சரம் பாய்ந்து=அம்புகளைத் தைக்கப்பட்டு, பாறும்=கெடுகின்ற, இலங்கைக்கோன்=இராவணனது, பதாதி உடல்=இராக்கதசேனாவீரர்களின் உடலிலுள்ள, தாதுக்கள் ஆறும்=(இரத்தமுதலிய) ஆறுதாதுக்களும், பகுபதம் சீர் அன்னிய ஏ=பகுபதத்தின் தன்மையை அடைந்தன (வெவ்வேறாயின என்றபடி)

ஏகாரம் இரண்டும் அசைநிலை. உம்மை - முற்றும்மை.

உடலிலுள்ள ஆறு தாதுக்களாவன - இரத்தம், சுக்கிலம், மூளை, தசை, எலும்பு, தோல். இரதத்தை இரத்தத்திலடக்கி ஆறெனக் கூறப்பட்டது. பகைவர் படையாற் பிளக்கப்படாத இராமபாணமே பகாப்பதத்தையொத்ததென்க. பகுதி விகுதி யிடைநிலை சாரியை சந்தி விகாரம் என்னும் ஆறுறுப்புகளாகப் பிரிக்கப்பட்ட பகுபதத்தைப்போல அரக்கருடலின் தாதுக்களாறும் அப்பாணத்தால வெவ்வேறாயின என்க.

46. சேனையழி யக்கண்ட தீயவனம் பாலநுமன்
மேனிதுளைத் தான்கண்டு வில்வீரன்—கோனிருதன்
வெஞ்சிலைகோல் தேர்பாகு மெய்க்கவச முன்றுணித்தி
ரளுசுமுடி வீழ்த்தினனே வாலி

சேனை அழிய கண்ட தீயவன்=தனது சேனைகள் அழியக்கண்ட கொடிய வனுகிய இராவணன், அம்பால் அநுமன் மேனிதுளைத்தான்=பாணங்களினால்

அருமையான உடலைப் பொள்ளலாகும்படி செய்தான், வில் வீரன் கண்மெலவால் = வில்வில்வல்லவனாகிய இராமபிரான் நோக்கி அம்புகளால், கோன் கிருதன் = தலைவனாகிய இராவணனது, வெம் சிலை கோல் = கொடியவில்லையும் அம்புகளையும், தேர் பாகு = தேரையும் சாரதியையும், மெய் கவசம் = உடம்பில் தரித்த கவசத்தையும், முன் துணித்து = முன்பு துண்டித்து, ஈர் அஞ்சு முடி வீழ்த்தினான் = (அவனது) பத்து மகுடங்களையும் (பின்பு) கீழ்த்தள்ளினான்.

முடி என்றதில் இறந்தது தழீஇய எச்சவும்மை தொக்கது. பாகு - பாகனென்றதின் ஈறுகெட்டது.

47. இன்னவிதம் வீட்டி யிராவணனை நோக்கியிறை
நின்னணியெல் லாம்போக்கி நின்றனைநீ—பொன்னவளை
யின்றுவிடுத் துய்தியன்றே லின்றுபோய் நாளைவந்து
பொன்றுகசுற் றத்தொடென்றான் புக்கு.

இறை = இராமபிரான், இன்னவிதம் வீட்டி = இவ்வாறு அழித்து, இராவணனை நோக்கி = இராவணனைப்பார்த்து, நீ நின் அணி எல்லாம் = நீ உனது படைகளெல்லாம், போக்கி நின்றனை = இழந்து (தனித்து) நிற்கின்றாய், பொன்னவளை இன்று விடுத்து உய்தி = இலக்குமியை ஒத்த சீதையை இப்பொழுது விட்டுப் பிழைப்பாயாக; அன்றேல் இன்று போய் = அல்லாவிடில் இன்று திரும்பிப்போய், நாளை வந்து = மறுதினத்தில்வந்து, சுற்றத்தொடு புக்கு = உறவினரோடு சேர்ந்து புகுந்து, பொன்றுக என்றான் = அழியக்கடவை என்று சொல்லினான்.

இராமபிரான் தருமயுத்தஞ்செய்பவனாதலால் படையின்றித் தனித்து நின்ற இராவணனை இன்றுபோய் நாளைக்குச் சுற்றத்தோடு வா என்றானென்க.

இன்ன என்றது குறிப்புப்பெயரெச்சம்.

48. வெள்ளிமலை பேர்த்தானுள் வெள்குற் றிலங்கையுற்றுத்
தெள்ளு மமைச்சரொடு தேர்ந்துகழு—முள்ளதனாற்
றுன்னலர்க்கொல் லென்று துயிலினெழுப் பிக்கும்ப
கன்னனைப்போர்க் குய்த்தான் கறுத்து.

வெள்ளிமலை பேர்த்தான் = கைலைமலையைப்பேர்த்தவனாகிய இராவணன், உள் வெள்குற்று = உள்ளம்வெட்கி, இலங்கை உற்று = இலங்கையை அடைந்து, தெள்ளும் அமைச்சரொடு தேர்ந்து = தெளிந்த மந்திரிகளுடன் ஆலோசித்து, கறுத்து = கோபங்கொண்டு, கும்பகன்னனை = கும்பகர்ணனாகிய தம்பியை, துயிலின் எழுப்பி = நித்திரையினின்று எழுப்பி, துன்னலர் = பகைவர்களை, கழுமுள் அதனால் = சூலாயுதத்தால், கொல் என்று = கொல்லுவாயென்று சொல்லி, போர்க்கு உய்த்தான் = யுத்தத்திற்குச் செலுத்தினான்.

கும்பகர்ணன்கதை - அவன் கடவுளைக்குறித்துத் தவஞ்செய்யக் கடவுள் வந்து யாதுவேண்டுமென நித்தியத்துவம் வேண்டுமென்பான் தீவினைவலியால் நாக்குழறி நித்திரத்துவம் வேண்டுமென்றனன்; அங்ஙனமாகுக வெனக் கடவுள் சொல்லப் பின்னர்க் கும்பகர்ணன் உணர்ந்து அறியாதுசொல்லினனு யினும் எப்பொழுதும் நித்திரைசெய்துகொண்டேயிருத்தல் கூடாதென வேண்ட, ஆறுமாதம் துயிலவும் ஆறுமாதம் விழித்திருக்கவும் வரந்தந்தனர்.

49\. அன்னவனப் போர்க்களம்படுக் களளியளளி வானரரை
மின்னொளியிற்று வாயமடுத்து மென்றிட்டு — மன்னுகதிர்த்
தேசின்மகனைப்பிடித்தூர சேறலுமன்னவனண்
ஞசிப்பறித்த தான்சென்றானக்கு.

அன்னவன் = அந்தக்கும்பகர்ணன், அ போர்க்களம் படுத்து = அந்தப் போர்க்களத்தை அடைந்து, வானரரை அள்ளி அள்ளி = வானரசேனைகளை (க்கைகளால்) எடுத்தெடுத்து, மின் எயிறு வாய் மடுத்து மென்றிட்டு = மின்னலை யொத்த பற்களையுடைய வாயில மென்று, மன்னு கதிர் தேசின் மகனை பிடித்து = நிரம்பிய கிரணங்களையுடைய சூரியபுத்திரனாகிய சுக்கிரீவனைப் பிடித்துக்கொண்டு, ஊர் சேறலும் = இலங்கையில் செல்ல, அன்னோன் = அந்தச் சுக்கிரீவன், அவன் அள் நாசி பறித்தான் = அக்கும்பகர்ணனது காதையும் மூக்கையும் பிய்த்துக்கொண்டவனாகி, ஏக்கு சென்றான் = திரிந்துத்திரும்பி வந்தவன்.

சேறலும - செல் என்னும் பகுதியடியாய்ப் பிறந்த உம் ஈற்று இறந்த கால வினையெச்சம. பறித்தான் - முற்றெச்சம.

50\. பன்னியநீண் மூக்கன் பறித்தகன்றானைக்கும்ப
கன்னன் றொடர்ந்தமரிற் காய்ந்தாரைப — பின்னடர்க்கக்
கண்டுகாகுத்தனவன கற்றோ டலைமருமம் தோள்
வண்டின்வீழ்த் தான்வில் வளைத்து.

கும்பகன்னன் = கும்பகர்ணன், பன்னிய நீள் மூக்கு அள் பறித்து அகன்றானை = சொல்லப்பட்ட தன் மூக்கையும் காதுகளையும பறித்துக் கொண்டு சென்றவனாகிய சுக்கிரீவனை, தொடர்ந்து அமரில காய்ந்தாரை = பின்பற்றிச்சென்று போரிலகோபித்த வானரர்களை, பின் அடர்க்க = பின்பும் அழிக்க, காகுத்தன் கண்டு = இராமபிரான் நோக்கி, வில வளைத்து = வில்லை வளைத்து, அவன் = அக்கும்பகர்ணனது, கல தோள் = மலைபோன்ற தோள் களையும், தலை = தலையையும, மருமம = மார்பையும், வண்டின் வீழ்த்தான் = அம்புகளால கொன்று தள்ளினன்.

அகன்றான் காய்ந்தார் - வினையாலணையும்பெயர்கள். கற்றோள் - உவமைத்தொகை; கல் தோள் எ - து "னலமுன்றனவும்" என்பதனுல் வருமொழித்தகரந்திரிந்து "அல்வழியவற்றொடுறழ்வும்" என்பதனுல் நிலைமொழியீற்று லகரம் றகரமாய்த்திரிந்து கற்றோள் என்றாயிற்று.

51. கன்றமர்மேற் கும்பகன்னனையி ராமன்றான்
கொன்ற துணர்ந்தரக்கர் கோன்சினவித் — தன்றிறை
சேனையொடு செல்கவெனச் சென்றதிகாயன்குரக்குத்
தானையொடு செய்தான் சமர்.

அரக்கர் கோன் — இராவணன், இராமன் கும்பகன்னனை கன்ற அமரில் — இராமபிரான் கும்பகர்ணனை வருந்தும்படி போரில், கொன்றது உணர்ந்து — கொன்ற செய்தியைத் தெரிந்து, சினவி — சினந்து, அதிகாயன் — அதிகாயனென்னும் அரக்கனைநோக்கி, தன் திறை சேனையொடு செல்க என — நெருங்கி நிறைந்த சேனைகளுடன் (போர்க்கு) போகக்கடவை என்று சொல்ல, சென்று — (அவ்வரக்கன்) போய், குரக்குத் தானையொடு சமர் செய்தான் — வானரசேனையோடு போர்புரிந்தனன். தான் அசைநிலை.

52. வெங்கவிகள் மார்புருவ வேலெய் நராந்தகனை
யங்கதன்மாய்த் தான்றேவாந் தகனை — யங்கனுமன்
குத்தினாற் கொன்றான் மகோதரனைக் குன்றொன்றான்
மொத்தினா னீலன் முனைந்து

வெங்கவிகள் மார்பு உருவ — கொடிய வானரங்களின் மார்பு ஊடுருவும்படி, வேல் எய் நராந்தகனை — வேலை எய்த நராந்தகனென்னும் அரக்கனை, அங்கதன் மாய்த்தான் — அங்கதன் கொன்றனன்; அனுமன் தேவராந்தகனை — அனுமானென்பவர் தேவர்களுக்கு யமனைப்போன்றுள்ள ஓரரக்கனை, அங்கு குத்தினால் கொன்றான் — அவ்விடத்தில் கைக்குத்தினாலே கொன்றனன், நீலன் முனைந்து — நீலனென்னும் வானரன் போர்செய்து, குன்று ஒன்றால் — ஒரு மலையினால், மகோதரனை மொத்தினான் — மகோதரனென்னும் அரக்கனை மோதினான். (தேவராந்தகன் - தேவாந்தகன்.)

53. திண்டிரிசி ராவென்பான் சென்னியையன் றன்வாளால்
விண்டிரிய வீசினா னெந்தநுமன் — கண்டிடபன்
மத்தனைத் தண்டா லடர்த்தான் வந்தவதி காயனைக்கம்
மத்திரத்தி லக்குவ னெய்தான்.

அனுமன் வெந்து — அனுமானென்பவர் கோபங்கொண்டு, திண் — வலிமையையுடைய, திரிசிரா என்பான் சென்னி — திரிசிரா என்று சொல்லப்படுகின்ற அரக்கனது தலையை, அன்னோன் வாளால் — அவனது வாளைக் கொண்டு, விண்டு இரிய வீசினான் — துண்டித்துக் கெடும்படி எறிந்தனன், மத்தனை இடபன் கண்டு — மத்தன் என்னும் அரக்கனை (போரில்) நோக்கி இடபன் என்னும் வானரன், தண்டால் அடர்த்தான் — தண்டாயுதத்தால் கொன்றனன், வந்த — (போருக்கு) வந்த, அதிகாயனை — அதிகாயனென்னும் அரக்கனை, இலக்குவன் — இலக்குமணன், கம் அத்திரத்தில் எய்தான் — பிரமனது அத்திரத்தினாலே கொன்றனன்.

விண்டிரிய-என்றதை விண் திரிய எனப்பிரித்து ஆகாயத்தில் திரியும்படி எனவும் பொருள்கொள்ளலாம். கம அத்திரம்-பிரமாஸ்திரம். என்பான் - செயப்பாட்டுவினை.

54. வல்லதிகாயன் மடிவரக்கர் கோமான்கேட்
டொல்லெனவி ராவணியை யுய்ப்பவ—னல்லணுக
மொய்யுற் றயன்கணையான் முன்னவன்பின் னோன்கவிகட்
கையுற்ற வீரரைவீழ்த் தான்.

அரக்கர் கோமான்=இராக்கதர்தலைவனான இராவணன், வல்ல அதிகாயன்=போரில்வல்ல அதிகாயனென்னும் அரக்கனது, மடிவு கேட்டு=இறப்பைக்கேட்டு, இராவணியை ஒல்லென உய்ப்ப=இந்திரசித்தனை விரைவாய் ஏவிவிட, அவன் அல் அணுக மொய் உற்று=அவ்விரவு வருதலும் போர்க்களம்புகுந்து, அயன் கணையால்=பிரமாத்திரத்தினால், முன்னவன்=இராமபிரானையும், பின்னோன்=இளையவனாகிய இலக்குமணனையும், கவிகட்கு ஐ உற்ற வீரரை=வானரங்களுக்குத் தலைமை பூண்ட வீரர்களையும் வீழ்த்தான்=மூர்ச்சித்து வீழச்செய்தான்.

ஒல்லென - விரைவுக்குறிப்பிடைச்சொல். அல் அணுக மொய் உற்று எ-து இராக்கதருக்கு இரவில் வலிமை மிகுதியாதலின்; அதனால் இராக்கதருக்கு நிசிசரர் என்று பெயராம். மடிவு - தொழிற்பெயர்.

55. வென்றிந் திரசித்து மீண்டச்சன் பாலணுகித்
துன்றுந்தன் போர்வீரஞ் சொற்றிருப்ப—நன்றெவருஞ்
சாய்விலர்நீ ருய்ந்ததா றென்றான்வீ டணன்வீழ்
சாம்பனநு மானருகு சார்ந்து.

இந்திரசித்து=இந்திரசித்து, வென்று மீண்டு=வெற்றிகொண்டு திரும்பிவந்து, அச்சன்பால் அணுகி=பிதாவாகிய இராவணனிடம் அடைந்து, துன்றும் தன் போர் வீரம்=நெருங்கிய தனது போரின்வலிமையை, சொற்று இருப்ப=சொல்லிக்கொண்டிருக்க, வீடணன்=விபீடணன், வீழ் சாம்பன்=வீழ்ந்துகிடக்கின்ற சாம்பவானும், அநுமான்=அநுமானுமாகிய இவர்களின், அருகு சார்ந்து=பக்கத்தில் அடைந்து, நீர் உய்ந்ததால்தான்=நீர் பிழைத்திருக்கின்றதாலேயே, எவரும் சாய்விலர்=ஒருவரும் இறந்திலராம், நன்று=நன்மையே உண்டாகும், என்றான்=என்றுசொல்லினன்.

சொற்று-இறந்தகாலவினையெச்சம்; சொல்-பகுதி, உ வினையெச்சவிகுதி, த் இடைநிலை, பகுதியீற்று லகரமும்இடைநிலையும் திரிதல் சந்தி.

எவருஞ்சாய்விலர் எ-து பிரமாஸ்திரத்தால் மயங்கிக் கிடக்கின்றவர்களைப்பிழைப்பூட்டுஞ் சஞ்சீவியை அநுமான் கொண்டுவருவான் என்பது கருத்தென்க. இருப்ப என்னும் எச்சம் என்றானென்றதைக் கொண்டது. அச்சன் திசைச்சொல். தான் தேற்றப்பொருளில்வந்த அசைநிலை.

56. வெள்ளி வரையிடப வெற்புண் மருந்துமலை
யுள்ளதநி லாவியுதவ் வதகம்—பொள்ளுவடுப்
போக்கதகம் மெய்க்கொள்படை போக்கதக மெய்த்துணியொ
ன்றாக்கதக நான்குமுள வால்.

வெள்ளிவரை இடபவெற்பு உள்=வெள்ளிமலைக்கும் இடபமலைக்கும் நடுவில், மருந்துமலை உள்ளது=சஞ்சீவிபருவதமானது இருக்கின்றது, அதில் ஆவி உதவு அதகம்=அம்மலையில் உயிரைக்கொடுக்கின்ற மருந்தும், பொள்ளு வடு போக்கு அதகம்=அம்புகளாற்றுளைக்கப்பட்ட காயங்களைப்போக்குகின்ற மருந்தும், மெய்கொள் படை போக்கு அதகம்=சரீரத்திற்செருகிக்கொண்ட ஆயுதங்களை வெளிப்படுத்துகின்ற மருந்தும், மெய் துணி ஒன்றாக்கு அதகம்=சரீரத்தில் வெட்டுண்ட துண்டுகளை ஒன்றாகச் சேர்க்கும் மருந்தும், நான்கும் உள=ஆகிய நான்கு மருந்துகளும் உள்ளன.

ஆல் அசை. மருந்து - மருத்து என விகாரமாயிற்று; "மென்றொடர் மொழியுட் சிலவேற்றுமையிற், றமவின வன்றொட ராகா மன்னே" என்றதனால். அதகம் - மருந்து, இவை நான்குவகை.

57. அன்னமருந் தீரிரண்டு மவ்விடைச்சென் றேகொணர்தி
யென்னவநு மான்பாய்ந் தங்கேகியே—துன்னுமதை
யோராதவ் வெற்பெடுத்தாங் குய்ப்பவண்ண லாதியர்மா
லீரா வெழுந்தார் தெளிந்து.

அன்ன மருந்து ஈர் இரண்டும்=அத்தன்மையனவாகிய நான்கு மருந்துகளையும், அ இடை சென்று ஏ கொணர்தி என்ன=அவ்விடம்போய்க் கொண்டுவருவாயென்று (விபீடணன்) சொல்ல, அநுமான் பாய்ந்து அங்கு ஏகி ஏ=அநுமான் அவ்விடம் நோக்கிப் பாய்ந்து சென்று, துன்னும் அதை ஓராது=பொருந்திய அம்மருந்திருக்குமிடத்தை அறியாமல், அ வெற்பு எடுத்து ஆங்கு உய்ப்ப=அந்த மருந்துமாமலையையே எடுத்துக் கொணர்ந்து அப்போர்க்களத்தில் சேர்க்க, (அம்மலையிலுள்ள சஞ்சீவியினால்), அண்ணல் ஆதியர்=இராமபிரான்முதலியவர், மால் ஈரா தெளிந்து எழுந்தார்=(பிரமாத்திரத்தாற்கட்டுண்டுமயங்கிய)மயக்கத்தினின்றுநீங்கித்தெளிவுற்று எழுந்தனர்.

ஏ இரண்டும் அசை. ஈரா-செய்யாவென்னுமுறழ்ந்தகாலவினையெச்சம். அன்ன-இடையடியாய்ப்பிறந்த பலவின்பாற் குறிப்புவினையாலணையும்பெயர்.

மால் ஈரா என - து "லனவேற்றுமையிற்றடவும" என்பதனால் நிலைமொழியீற்று லகரம் றகரமாய் "னலமுன்றனவும" என்பதனால் தகரம் றகரமாய் "குறில் செறியாலள வல்வழிவந்த தகரந்திரிந்தபிற் கேடும்" என்பதனால் றகரங்கெட்டு மாறீரா என்றாயிற்று.

58. பின்னாரு மானப் பிறங்கலமுன் றங்கிடத்து
மின்னனைப்பாய்ந் தேகிவைத்து மீண்டெய்த—மந்தமையி
லேம்படுத்தார் தாமரைமன் செய்முதலோ ரவ்விலங்கை
யெடுத்தா ரார்த்துச் சினந்து.

பின்னர் அநுமான்—பின்பு அநுமான், அ மிறங்கலை—அந்தமலையை, முன் தங்கு இடத்து=முன்பு இருந்தஇடத்தில, மின் என பாய்ந்து ஏகி வைத்து—மின்னலைப்போல் தாவிச்சென்று வைத்து, மீண்டு எய்த=திரும்பி வந்தடைய, மன்னும அளி தேன் மடுத்து ஆர்—மிக்கவண்டுகள் தேனையுண்டு பொருந்துகின்ற, தாமரை மன் சேய் முதலோர்=தாமரைநாயகனாகிய சூரியன்புதல்வனான சுக்கிரீவன் முதலிய வானரர், சினந்து ஆர்த்து=கோபங் கொண்டு கூச்சலித்து, அ இலங்கை தீ மடுத்தார்—அந்த இலங்கையில் தீமூட்டினர்.

சூரியனைத் தாமரைமன் எ-து தாமரைக்கு நாயகனாதலின்.

தேன் மடுத்தார்—"தேன்மொழி" என்னுஞ்சூத்திரத்தில மென்மை மேவின்றுதியழிவும் என்றவிதியால இறுதினகரமெய கெட்டுத் தேமடுத் தார் எனப் புணர்ந்தது. மின் எனபாய்ந்து எ-து விரைவுபற்றி எழ்க.

59\. பம்பிலங்கைத் தீயொடுரு பான விழித்தீ மோதக்கோன்
கும்பகன்னன் மைந்தர்தமைக் கூவியே—வெம்பமருக்
குயப்பவவர் வேற்றகுவ ரோடும் இராகவனார்
மெய்ப்படையோ டேற்றார் வெகுண்டு.

கோன்=தலைவனாகிய இராவணன், இலங்கை பம்பு தீ ஒடு=இலங்கை யிற்பற்றியெரிகிற தீயுடன், உருபான் விழி தீ மோத—தனது உருபத்துகண் களினின்று கொட்டுகின்ற தீயானது முட்டும்படி, கும்பகன்னன் மைந்தர் தமை கூவி=கும்பகர்ணனது புத்திரர்களை விளித்து, வெம்பு அமருக்கு உயப்ப—கொடிய போர்செய்தற்கு ஏவிவிட, அவர—அந்தமைந்தர்கள், வேல் தருவரோடு உற்று—வேலைத்தரித்த இராக்கதபடைவீரர்களோடு சேர்ந்து (போர்க்களம்) புகுந்து, இராகவனார்தம் மெய் படை ஓடு—இராமபிரானது உண்மையாகிய வானரசேனையோடு, வெகுண்டு ஏற்றார்—கோபங்கொண்டு எதிர்த்தனர்.

விழித்தீ மோத எ-து மிக்க கோபங்கொண்டு என்றபடி. கும்பகன்னன் வடமொழிமருஉ; கும்பம்போலும் செவியுடையான். ஏ தான்-அசைகள்.

60\. அங்கதன் கம்பனனுக் காருலகு மேற்றபிர
சங்கனுக்குக் கூற்றுலகுந் தந்திட்டான—பொங்குதிரக்
கண்ணன் றனைத்துவிதன் காதினனாற் கொன் றனனுயக்
கண்ணன் றனைமயிந்தன் காய்ந்து.

அங்கதன்=அங்கதனானவன், ஏற்ற அகம்பனனுக்கு ஆர் உலகும்—எதிர்த்துப்போர்செய்த அகம்பனனென்னும் அரக்கனுக்கு வீரசுவர்க்கத்தையும், பிர சங்கனுக்கு கூற்று உலகும்—பிரசங்கனென்னும அரக்கனுக்கு இயமனுலகத் தையும், தந்திட்டான்—கொடுத்தனன் (கொன்றனனென்றபடி); துவிதன்= துவிதன் என்னும் வானரன், பொங்கு உதிரக்கண்ணன் தனை=இரத்தம் பொங்குகின்ற கண்களையுடையவனாகிய அரக்கனை (சுரோணிதாக்ஷனை),

காதினன் = கொன்றனன்; மயிந்தன் = மயிந்தனென்னும் வானரன், யூபம் கண்ணனை = யூபத்தம்பம்போலும் கண்ணையுடைய அரக்கனை (யூபாக்ஷனை), காய்ந்து கொன்றான் = கோபித்துக்கொன்றனன்.

காமதேநுவையுடைமையால் சுவர்க்கத்திற்கு ஆனுலகு என்றுபெயர். யூபம் - யாகசாலையில் பசுவைக்கட்டுந்தறி; அதுபோல நீண்டுயர்ந்த விழிகளையுடையான் யூபாக்ஷன் என்க.

ஆனுலகும் கூற்றுலகும் தரவிட்டான் எ-து குறிப்பிற்றருமொழி.

'எல்லவன்மைந் தன்போரி லேற்றகும்பன் வான்மகளிர்
மெல்லிதழ்த்தேன் கூட்டுண்ண விட்டனனாற்-கொல்லியனி
கும்பனைநேர் மாருதியோர் குத்தினிற்சாய்த்தான்மாயத்தா
னம்பிமக ரக்கணனை நைத்து.

எல்லவன் மைந்தன் = சூரியபுத்திரனாகிய சுக்கிரீவன், போரில் ஏற்ற கும்பன் = யுத்தத்தில் வந்தெதிர்த்த கும்பனென்னும்இராக்கதனானவன், வான் மகளிர் = வீரசுவர்க்கத்திலுள்ள அரம்பைமாதர்களின், மெல் இதழ் தேன் கூட்டுண்ண = மெல்லிய அதரபானமாகியதேனைக் கொள்ளைகொண்டுண்ணுமபடி, விட்டனன் = போக்கினான் (கொன்றனன் என்றபடி), கொலை இயல் நிகும்பனை = கொலைத்தொழில்பொருந்திய நிகும்பனென்னும் அரக்கனை, நேர் மாருதி = எதிர்த்த அநுமான், ஓர் குத்தினில் சாய்த்தான் = ஒரு கைக்குத்தினாலே கொன்றனன், நம்பி = இராமபிரான், மகரக்கணனை நைத்து மாய்த்தான் = மகரக்கண்ணனென்னும அரக்கனைத் தேய்த்துக் கொன்றனன்.

இதழ்த்தேன்கூட்டுண்ண எ-து அதரபானஞ்செய்து இன்பநுகரும்படி என்க. ஆல் - அசை.

62 இன்னசெயல் கேட்டரக்க னிந்திரசித் தைப்போக்க
வன்னவனு மாயாசீதை யைக்கொணர்ந்து—முன்னநுமன்
காணவெறிந் திட்டுமகங் கண்டிடச்சென் றானதையம்
மாணவனண் ணற்குரைத்தான் வந்து.

அரக்கன் = இராவணன், இன்ன செயல் கேட்டு = இத்தன்மையாகிய செய்கையைக் கேள்வியுற்று, இந்திரசித்தை போக்க = இந்திரசித்தனைப் போருக்கனுப்ப, அன்னவன் = அவ்விந்திரசித்தன், மாயாசீதையை கொணர்ந்து = மாயையினாலாகிய சீதைபோன்றவொருருவத்தைக் கொண்டுவந்து, அநுமன் முன் = அநுமானுக்குளெதிரில், காண எறிந்திட்டு = பார்க்கும்படி வெட்டி, மகம் கண்டிட சென்றான் = நிகும்பலையென்னும்யாகஞ்செய்யச் சென்றனன், அம்மாணவன் வந்து அதை = அந்த அநுமான்வந்து அச்செயலை, அண்ணற்கு உரைத்தான் = இராமபிரானுக்குச் சொல்லினன்.

மாயாசீதை - மாயையினாலுண்டாக்கிய பொய்ம்மையாகிய சீதை. நிகும்பலை எ - து ஓமாக்கினியில் ஆகுதிகொடுத்துக் குடோரஞ்செய்யும் ஒரு யாகம். மாணவன் - வித்தியார்த்தி.

63. கோதைமகன்சொற்கேட்டுக் கோசலர்கோன்றான்வருந்த
வாதைசெயி ராவணிதன் மாயையினுஞ்—சீதைதனைக்
கொன்றுமகஞ் செய்வானி கும்பலையை யுற்றனென்
றன்றுணரும வீடணன்சொல் வான்.

கோதைமகன் சொல் கேட்ட கோசலர் கோன்=வாயுபுத்திரனாகிய அநுமானது சொல்லைக் கேட்ட கோசலநாட்டரசனாகிய இராமபிரான், வருந்த=துன்புற, அன்று=அப்பொழுது, வாதை செய் இராவணி=துன்பஞ் செய்கின்ற இந்திரசித்தன், தன் மாயையின் ஆம் சீதைதனை=தனது மாயாசத்தியினால் உண்டாகிய சீதையை, கொன்று=கொன்றுவிட்டு, மகம் செய்வான் நிகும்பலையை உற்றான் என்று=யாகஞ்செய்யும்பொருட்டு நிகும்பலைசெய்யும் இடத்தை அடைந்தனன் என்று, உணரும் வீடணன் சொல்வான்=அறிந்தவனாகிய விபீடணன் (பின்வருவதை) உரைப்பானாயினான்.

நிகும்பலை - நிகும்பலாயாகஞ்செய்த இடத்திற்கு ஆகுபெயராயிற்று.

வருந்த என்னும் செயவெனெச்சம் சொல்வான் என்னும் பிறகருத்தா வினையைக் கொண்டது. தான் தன் தன் அசைகள்.

64. அன்னமக முற்றி லவனைவெல்லொ ணாதின்னே
பின்னவனை யுய்க்கவெனப் பெம்மான்றான்—பன்னவவன்
வீடணன்முன் வானரர்பின் மேவிவரச் சென்றனன்போ
ராடநுமன் மீதேறி யாங்கு.

அன்ன மகம் முற்றில=(இந்திரசித்தன் செய்கின்ற) அந்தயாகம் முடிந்தால், அவனை வெல்ல ஒண்ணாது=அவ்விந்திரசித்தனை (எவராலும்) வெல்லமுடியாது, (ஆதலின்), இன்னே பின்னவனை உய்க்க என=இப்பொழுதே இலக்குமணனை (அம்மகத்தையழிக்கும்படி அவ்விடத்திற்குச்) செலுத்தக்கடவாய் என்று (விபீடணன்) சொல்லலும், பெம்மான் தான் பன்ன=இராமபிரான் (அவ்வாறுஇலக்குமணனைநோக்கிச்) சொல்ல, அவன் போர் ஆடு அநுமன்மீது ஏறி=அவ்விலக்குவனும் போர்புரியும் அநுமான் மேல் ஏறி, வீடணன் முன்=விபீடணன்முன்னும், வானரர் பின்=வானரர்கள் பின்னும், மேவி வர=சேர்ந்துவர, ஆங்கு சென்றனன்=அவ்விடத்திற்குச் சென்றான்

ஏகாரம் தேற்றம். தான் அசைநிலை. வெல்ல என்னும் எச்சத்திறுதொக்கது. ஒண்ணாது எ - து இடைகுறைந்து நின்றது விகாரம்.

65. தக்கன்மகஞ் சைவுதனைஞ் சாய்த்தென்ன வானரர்கள்
புக்கரக்கன் மைந்தன் புரிமகத்தைத்—தொக்கழிக்கக்
கண்டா னவனுள்ளங் காய்ந்தான் பரித்தேர்மேற்
கொண்டான் பெரும்போர் குறித்து.

வானரர்கள் புக்கு = (இலக்குவனோடுசென்ற) வானரர்கள் புகுந்து, அரக்கன் மைந்தன் புரி மகத்தை = இராவணபுத்திரனாகிய இந்திரஜித்துச் செய்கின்ற யாகத்தை, தக்கன் மகம் சைவகணம் சாய்த்தென்ன = தக்கன்இயற்றியயாகத்தைச் சிவகணங்கள் அழித்ததுபோல, தொக்கு அழிக்க = ஒன்றுகூடி அழித்தலும், அவன் கண்டான் உள்ளம் காய்ந்தான் = அவ்விந்திரசித்து நோக்கி மனத்தில் கோபங்கொண்டு, பெரு போர் குறித்து = பெரிய யுத்தத்தை உத்தேசித்து, பரி தேர் மேற்கொண்டான் = குதிரை பூண்ட தேரின்மேலேறினன்.

கண்டான், காய்ந்தான் - முற்றெச்சங்கள், சாய்த்த என்னும் பெயரெச்சத்திறுதி தொக்கது. சைவகணம் - சிவசம்பந்தமுற்ற பூதங்களின்கூட்டம்.

தக்கன் மகம் அழித்தது எ - து தக்ஷன் என்னும் பிரமபுத்திரன் சிவபெருமானை யாகபதியாகக் கொள்ளாது நிந்தித்து ஓர் யாகஞ்செய்ய அதனையுணர்ந்து சிவபெருமான் சினந்து தன் சடையைப் பூமியிலடித்து அதினின்று வீரபத்திரரை உண்டாக்கி ஏவிவிட, அவருடன்சென்ற சிவகணங்கள் அந்தயாகத்தை அழித்தன.

66. இந்திரனை வென்றா னெதிர்கவியொவ் வொன்றிற்கும்
பந்தியினோ ராயிரவெம் பாணம்பெய்—இந்திரர்நே
ராக்கினான் சில்லம் பநுமனுட லூடுருவத்
தாக்கினான் விற்கோட்டித் தான்.

இந்திரனை வென்றான் = இந்திரனை வெற்றிகொண்ட அவ்விந்திரசித்து, வில் கோட்டி — வில்லைவளைத்து, எதிர் கவி ஒவ்வொன்றிற்கும் = எதிர்த்த ஒவ்வொருவானரத்திற்கும், பந்தியின் ஓர் ஆயிரம் வெம் பாணம் பெய்து = ஒழுங்காய் ஒரு ஆயிரமாகிய கொடிய அம்புகளை எய்து, இந்திரர் நேர் ஆக்கினான் = (உடலில் ஆயிரங்கண்களையுடைய) இந்திரர்களுக்கு ஒப்பாக்கினான், அநுமன் உடல் ஊடுருவ = அநுமானது உடலில் துளைத்துருவும்படி, சில் அம்பு = சிலபாணங்களை, தாக்கினான் = எய்தனன்.

இந்திரர் எ - து ஒவ்வொருவானரத்தின்உடலிலும் ஆயிரம் அம்புகளையேவி ஆயிரம் துவாரங்களை உண்டாக்கலின் வந்தபன்மை என்க. "ஆயிரங் கண்ணோன் இந்திரன்." உம் முற்றும்மை. தான் அசைநிலை.

67. மேகநாதன்பெய்ய விசிகமழை போக்கியவ
னுகந்ன கைமேவலி யைத்துணித்து—வேகநேர்
வையர் துகளாக்கி வாசிகரி யைத்துமித்தா
னையற் கிளவலம்பி னால்.

ஐயற்கு இளவல் = இராமபிரானுக்கு இளையோனாகிய இலக்குமணன், மேகநாதன் பெய = இந்திரசித்தனால் கொட்டப்பட்ட, விசிகம் மழை அம்பினால் போக்கி = அம்பாகிய மழையைத் தன் அம்புகளால் [illegible] அவனது உடலையும், கை [illegible]

டத்தையும், துணித்து—துண்டித்து, வேகம் நேர் வையம் தூள் ஆக்கி—வேகம்பொருந்திய தேரைத் தூளாகச்செய்து, வாசி கரியை துமித்தான்—குதிரைகளையும் யானைகளையும் துலைத்தனன்.

மேகநாதன் எ - து இந்திரசித்தன் இளமைப்பருவத்தில் இந்திரனது வாகனமாகிய மேகத்தைப் பிடித்துப் பிழிந்த இடிபோற் கர்ச்சித்தானாதலின் என்க.

68. போகிமரு மந்தன்னைப் போழ்ந்தியம னூருளைத்தின்
றாகிய குபேர னரத்தந்தோய்ந்—தேகியே
கொந்தழலின் பட்ட கொடுங் கோலநுமன் மார்புருவ
விந்திரசித் தெய்தா னிகைத்து.

இந்திரசித்து = இந்திரசித்தனானவன், போகி மருமம் தன்னை போழ்ந்து—இந்திரனது மார்பைப் பிளந்து, இயமன் ஊரை தின்று—இயமனது ஊரை உண்டு, ஆகிய குபேரன் அரத்தம் தோய்ந்து—பகைமையாகிய குபேரனது இரத்தத்தில் படிந்து, ஏகி ஏ கொந்து அழல் என்பு அட்ட—(தென்கீழ்த்திசையில) சென்று எதிர்த்த அக்கினிதேவனது என்பையும் அழித்ததாகிய, கொடு கோல்—கொடியபாணத்தை, அநுமன் மார்பு உருவ—அநுமானது மார்பில ஊடுருவும்படி, இகைத்து எய்தான்—பகைத்து எய்தனன்.

இந்திரசித்தன் இந்திரனையும், இயமனையும், குபேரனையும், அக்கினியையும் வென்றவனாதலின் அவனது அம்பு - கொடுங்கோலென்னப்பட்டது.

தன் ஏ - அசைநிலைகள்.

69. மாருதிமார் பூடுருவி வார்குருதி கண்டிளவல்
கூருறுவின், ஞாணேற்றத் தோற்றரக்கன்—கார்முகங்கை
யற்றதுமா வற்றனதே ரற்றதுபா கற்றனன்மீண்
டுற்றனனன் றனிலங்கை யூர்.

மாருதி மார்பு ஊடுருவி—(அவன்விட்ட பாணத்தினால்) அநுமானது மார்பு துளைக்கப்பட்டு, வார் குருதி இளவல் கண்டு—கொட்டுகின்ற இரத்தத்தை இலக்குமணன் நோக்கி, கூர் உறு வில் ஞாண் ஏற்ற—வலிமையுள்ள வில்லில் (அம்புதொடுக்க) நாண்பூட்டுதலும், அரக்கன்—இந்திரசித்தனாகிய அரக்கனது, கார்முகம் தோற்று கை அற்றது—வில்லானது தோல்வியடைந்து கையினின்றும் நீங்கியது, மா அற்றன—குதிரைகள் அழிந்தன, தேர் அற்றது—அவனேறிய தேர் உடைந்தது, பாகு அற்றனன்—சாரதி மடிந்தனன், அன்னான் மீண்டு—அவன் திரும்பி, இலங்கை ஊர் உற்றனன்—இலங்காபுரியை அடைந்தனன்.

[illegible]என்னும் வினையெச்சம் வார் என்னும் வினைத்தொகை கொண்டது.

70. மீட்டன் னவனொடியில் வேறொருதேர் மேற்கொண்டு
மாட்டுஞ் சமர்க்களத்தில் வந்தெதிர்த்துப்—பூட்டம்பால்
வானரரைச் சாய்க்கவவன் வையமா வைத்தொலைத்தா
னானல வீடணன்றண் டால்.

மீட்டு=திரும்பி, அன்னவன்=அவ்விந்திரசித்தன், நொடியில் வேறு ஒருதேர் மேற்கொண்டு=நொடிப்பொழுதிற்குள் மற்றொருதேரின்மேலேறி, மாட்டும் சமர்க்களத்தில் வந்து எதிர்த்து=கொல்லுகின்ற போர்க்களத்தில் வந்து எதிர்த்து, பூட்டு அம்பால்=(வில்லில்)தொடுத்த பாணத்தினால், வானரரை சாய்க்க=வானரவீரரை வீழ்த்த, ஆன நலம் வீடணன்=ஆகிய நன்மையையுடைய விபீடணனானவன், தண்டால் அவன் வையம் மா வை=தண்டாயுதத்தால் அவனது தேரிற்பூட்டிய குதிரைகளை, தொலைத்தான்=கொன்றனன்.

சாய்க்க என்னும் வினையெச்சம் தொலைத்தான் என்னும் பிறகருத்தாவினையைக்கொண்டது. மீட்டு - செய்தென் எச்சம்; இது மீண்டு என்றும் வழங்கும்.

71. இந்திரன்கண் டுள்ளுவப்ப வெண்கணனும் போர்வியப்ப
முந்துகட லுஞ்சிவப்ப மூன்றுநா—ணந்துகளத்
தெல்லிரவு மோவா திராவணியுங் காகுத்த
னல்லிளவ லும்விளைத்தா ராட்பு.

இராவணியும்=இந்திரசித்தனும், காகுத்தன் நல் இளவலும்=இராமபிரானது நலலதம்பியாகிய இலக்குமணனும், இந்திரன் கண்டு உள் உவப்ப=இந்திரன்நோக்கி மனமகிழவும், எண்கணனும் போர் வியப்ப=பிரமதேவனும் அப்போரைக்கண்டு ஆச்சரியங்கொள்ளவும், முந்து கடலும் சிவப்ப=முதலிலுள்ளதாகிய (கரிய) கடலும் சிவப்புநிறத்தையடையவும், மூன்று நாள் எல் இரவும் ஓவாது=மூன்றுதினங்கள் பகலும்இரவும் ஒழிவின்றி, நந்து களத்து ஆட்பு விளைத்தார்=கேட்டையடையும் போர்க்களத்தில் யுத்தஞ்செய்தனர்.

இந்திரன் உவப்ப எ - து அப்போரில் இந்திரசித்து இறப்பானென்ற உறுதிபற்றி என்க. எண்கணனும் வியப்ப எ - து எட்டுக்கண்களினாலும் அப்போர்நிகழ்ச்சியை நோக்கி என்க. கடலும் சிவப்ப எ - து இரத்தவெள்ளம் பாய்தலின் என்க. உம்மை இரண்டும் உயர்வுசிறப்பு.

72. இவ்வாறு போரா டிவரு ளிலக்குவனேர்
தெவ்வாடும் விற்கோட்டித் தேவர்கோன்—வெவ்வாளி
விட்டா னிராவணிமெய் விட்டா னரம்பையர்பாற்
பட்டா னுயிர்போய்ப் பதைத்து.

இ ஆறு=இவ்விதமாய், போர் ஆடு இவருள்=யுத்தஞ்செய்கின்ற இவருள், இலக்குவன்=இலக்குமணனானவன், நேர் தெவ் வாடும் விற்கோட்டி

எதிர்த்தபகைவர் சோர்வுறத்தக்க விலலை வளைத்து, தேவர்கோன் வெம்பாளி விட்டான்=இந்திரனது கொடிய அம்பை (ஐந்திராஸ்திரத்தை) எய்தனன், இராவணி பதைத்து உயிர் போய் மெய விட்டான்=இந்திரசித்து துடித்து உயிர்நீங்கி உடலைத்துறந்தனனாகி, அரமபையர்பால் பட்டான்=(வீரசுவர்க்கத்துள்ள) அரமபைமாதர்களிடஞ் சேர்ந்தனன் (இறந்தனனென்றபடி). விட்டான் - முற்றெசசம.

பதைத்து உயிர்போய மெயவிட்டான் என முடிக்க.

73. விண்ணவர்பூ மாரிபெயமெயத்தவர்கள் வாழ்த்தெடுப்ப
மண்ணவரி யாரு மனங்களிப்ப—வண்ணலடி
தாழ்ந்தா னிளவலவன் றன்னைத் தழீஇயின்பத்
தாழ்ந்தான்பல் லாசிசொற் றான.

விண்ணவர் பூமாரி பெய=(இந்திரசித்துஇறந்ததனால்)தேவர்கள் மலர் மழை பெய்யவும், மெய் தவர்கள் வாழ்த்து எடுப்ப=உண்மையுள்ள தவசிகள் வாழ்த்துமொழிகூறவும, மண்ணவர் யாரும மனம் களிப்ப=பூமியிலுள்ளாரெல்லாரும் மனமகிழவும, இளவல=இலக்குமணன், (மீண்டுவந்து), அண்ணல் அடி தாழ்ந்தான்=இராமபிரானது திருவடிகளை வணங்கிநின்றனன்; (இராமபிரான்), அவன் தன்னை தழீஇ இன்பத்து ஆழ்ந்தான்=அவ்விளவலைத் தழுவிக்கொண்டு ஆநநததிலமூழ்கினனாகி, பல ஆசி சொற்றான்=பல ஆசிமொழிகளைச் சொல்லினான்.

ஆழ்ந்தான் - முறறெசசம. தழுவி என்றது தழீஇ என அளபெடுத்து இன்னிசைநிறைத்து நின்றது. தன் ஆல - அசைநிலைகள்.

74. இதுநிற்க விராவணியின் சாவுகேட்
டங்கிலங்கைக் கோன்றுன்ப வாரியிலவீழ்ந்—துங்குறைந்த
மூலபல மாம்பரிதேர் மொயம்மா பதாதிகளை
வேலையெனப் போர்க்குய்த்தான் வெந்து.

இது இங்கு நிற்க=இச்செயல் இவ்விடத்து(இப்படி) இருக்க, அங்கு இலங்கைக்கோன்=அவ்விடத்து இராவணனானவன், இராவணியின் சாவு கேட்டு=இந்திரசித்தனது மரணத்தைக் கேள்வியுறறு, துன்பம வாரியில் வீழ்ந்து=துக்கசாகரத்தில மூழ்கி, வெந்து=மனங்கொதித்து, உங்கு உறைந்த=அவ்விடத்தில் தங்கியிருந்த, மூலபலமம் ஆம=மூலபலம் ஆகிய, பரி தேர் மொய் மா பதாதிகளை=குதிரைகளும் தேர்களும் நெருங்கியயானைகளும் காலாட்களும் ஆகிய சேனையை, போர்க்கு=யுத்தஞ்செய்தற்கு, வேலை என உய்த்தான்=கடலையேவியதுபோலச் செலுத்தினன்.

மூலபலம் எ-து இலங்கையில் இராவணனால் அடிப்படையாய்ச் சேர்த்து வைக்கப்பட்டிருந்த அநேகசேனைகள். தான் - அசைநிலை.

75. பொங்குகடல் போர்க்களத்திற் போந்தெதிர்த்த தானைகளை
பொங்குகட னேர்செம் புனல்பருகிப் — பொங்குங்
கடிகைகோத் தாடக் கணைமழையால் வள்ளல்
கடிகையே ழிற்சாய்த்தான் காய்ந்து.

பொங்கு கடல் போல் — பொங்குகின்ற கடலைப்போல, களத்தில் போந்து எதிர்த்த தானைகளை — போர்க்களத்தில் புகுந்து எதிர்த்துநின்ற மூலபலப் படைகளை, வள்ளல் — இராமபிரான், பொங்கும் கடி — மிகுந்த பேய்க்கணங்களானவை, பொங்கு கடல் நேர் செம்புனல் பருகி — பெருகிய கடலையொத்த சிவந்த இரத்தநீரைக் குடித்து, கை கோத்து ஆட — கைகளை (ஒன்றோடொன்று) கோத்துக்கொண்டு கூத்தாடும்படி, கணை மழையால் — பாணவருடத்தால், கடிகை எழில் — ஏழுநாழிகையில், காய்ந்து சாய்த்தான் — கோபித்துக்கொன்றனன்.

கடிகையேழிற் சாய்த்தான் என்றது இராமபிரான் மூலபலசேனையை ஏழரைநாழிகையளவில் கொன்றனன் என்றும் ஒருமுகூர்த்தத்திற்கொன்றனனென்றும் சில இராமாயணங்களிற் சொல்லப்பட்டிருப்பினும் கூர்மபுராணம் இதற்கு முதனூலாதலின் அதின்படி ஏழுநாழிகையென்றே சொல்லப்பட்டதென்க. கூர்மபுராணம் இராவணவதைஅத்தியாயம் செய்யுள்-௭௫.

76. தானவர்கோன் மூலபலஞ் சாய்ந்தமைகேட் டான்சினந்து
காலுளைய மூச்செறிந்து காயகனலி — தானடுங்கக்
கட்சிவந்தான் பார்குலுங்கக் கையெறிந்தான் வானவர்நொந்
துட்சிவந்தா ரென்னாமென வோர்ந்து.

தானவர்கோன் — இராக்கதர்க்குத்தலைவனான இராவணன், மூலபலம் — மூலபலசேனைகள், சாய்ந்தமை கேட்டான் — இறந்தமையைக் கேட்டவனாய், சினந்து கால் நைய மூச்செறிந்து — கோபித்து வாயுவும் வருந்தும்படி பெருமூச்சுவிட்டு, காய் கனலி தான் நடுங்க — வெதுப்புகின்ற அக்கினியும் நடுங்கும்படி, கண் சிவந்தான் — கண்களில் சிவப்பேறப்பெற்றனன், பார் குலுங்க கை எறிந்தான் — பூமியிலுள்ளார் நடுங்கும்படி கைகளை வீசினன், வானவர் — தேவர்கள் (கண்டு), என் ஆம் என்று ஓர்ந்து — (இக்கோபத்தால்) எத்தீங்கு நேருமோ என்று கருதி, நொந்து உள் சிவந்தார் — வருந்தி உள்ளத்தில் சிவப்பேறப்பெற்றனர்.

நொந்து உள்சிவந்தார் என்றதில் சிவப்பேறப்பெறுதலாவது ஒன்றைக் குறித்து ஆராய்ந்து கன்றுதலாம். "ஆய்ந்து சிவந்தது பாவாணர் நெஞ்சம்" என்பதனானு முணர்க. கேட்டான் - முற்றெச்சம். தான் - அசைநிலை.

77. மாபாரிசுவன் மகோதரன் விரூபாக்கன்
கோபாநலமுறுதங் கோனுரையாற் — பூபாரந்
தாங்காதென் றோதச் சதுரங்க சேனையொடு
மாங்கார்த்துச் சென்றா ரமர்க்

கோபம் அநலம் உறு தம் கோன் உரையால்—அக்கினியையொத்த கோபம்பொருந்திய தமது தலைவனாகிய இராவணனது கட்டளையினால், மாபாரிசுவன்—மகாபாரிசுவனும், மகோதரன்—மகோதரனும், விரூபாக்கன்= விரூபாக்கனும் ஆகிய இராக்கதர்கள், பூ—பூமியானது, பாரம் தாங்காது என்று ஓத—இப்பாரத்தைப்பொறுக்காது என்று(கண்டோர்)சொல்லும்படி, சதுரங்க சேனையொடும்—நால்வகைச்சேனையோடும், ஆங்கு ஆர்த்து—அவ்விடத்தில் கர்ச்சித்து, அமர்க்கு சென்றார்=போருக்குச் சென்றனர்.

மகாபாரிசுவன் - பெரியவிலாப்புறமுடையவன். மகோதரன் - பெருவயிற்றினன். விரூபாக்கன் - மாறுபட்ட கண்ணுடையோன்.

கோபாநலம் - வடமொழித் தீர்க்கசந்தி. உம்மை எதிரதுதழீஇயது.

78. சூழ்ந்தொருவன் சாங்காலைச் சுற்றத்தார் மேற்புரண்டு
வீழ்ந்தழுது காக்கும் விதமெனத்தன்—வாழ்ந்தபுகழ்
சாமரைசங்கொண்குடையாய்த்தாய்ப்புரண்டேங் கிக்காப்பப்
போமரக்கன் றேரிவர்ந்தான் போர்க்கு.

ஒருவன் சாம் காலை=(இவ்வுலகில்) ஒருவன் இறக்குந்தருணத்தில், சுற்றத்தார் சூழ்ந்து மேல் புரண்டு வீழ்ந்து—உறவினர் சூழ்ந்துகொண்டு மேல் புரண்டு வீழ்ந்து, அழுது—புலம்பி, காக்கும்—காத்துக்கொண்டிருக்கும், விதம் என—தன்மைபோல, தன் வாழ்ந்த புகழ்—தனது வாழ்வுற்றிருந்த கீர்த்தியானது, சாமரை=சாமரையுருவமும், சங்கு—சங்குருவமும், ஒண் குடை ஆய்—ஒள்ளிய சுவேதசத்திரவுருவமுமாகி, தாய் புரண்டு=(தன்மீது) தாவிப்புரண்டு, ஏங்கி=அழுது, காப்ப—காத்துக்கொண்டிருக்கும்படி, போம் அரக்கன்—அழிந்துபோகும் இராவணன், போர்க்கு தேர் இவர்ந்தான்= போர்செய்தற்குத் தேரி லேறினான்.

இராவணன் தன்புகழானது சாமரைவடிவாய் மேல்விழுந்து புரளல் போலப் புரளவும், சங்கின்வடிவாய் அழுவதுபோல் ஒலிக்கவும், வெள்ளைக் குடைவடிவமாய்த் தன்னைக்காத்துக்கொண்டிருப்பதுபோல் நிழற்றவும் எனத் துற்சகுனக்குறிப்பாக நிரனிறைபாக்கிக் கொள்க; புகழின் நிறம் வெண்மையாதலின் சாமரை சங்கு குடை என்னப்பட்டது. இப்பொழுது போருக்குச்செல்லும் இராவணன் மீளானெனல் தோன்றப் போமரக்கனென்னப் பட்டது.

79. வார்கதிரோன் மைந்தனொடு வந்தவிரூ பாக்கனெதிர்த்
தோர்கதையி னாற்புடைத்த லுஞ்சோர்ந்து—தேர்கவிமன்
னவ்வரக்கன் சென்னி யனுங்கநெரித் தான்கண்ணிற்
செவ்வரத்தங் காலச் சினந்து.

வந்த விரூபாக்கன்=போருக்குவந்த விரூபாக்கன், வார் கதிரோன் மைந்தனொடு எதிர்த்து=மிகுந்தகிரணங்களையுடைய சூரியபுத்திரனாகிய சுக்கிரீவனுடன் எதிர்த்து, ஓர் கதையினால் புடைத்தலும்—ஒருதண்டாயுதத்

நான் மோதகனும், சோர்ந்து—சோர்வுற்று, தேர் கவி மன்—(பின்பு) தெளிவுற்ற வானரபதியான சுக்கிரீவன், கண்ணில் செம் அரத்தம் கால சினந்து—கண்களில் இரத்தங்கொட்டக் கோபங்கொண்டு, அ அரக்கன் சென்னி அனுங்க நெரித்தான்—அந்த அரக்கனது தலை நொறுங்கும்படி நெரித்தனன்.

புடைத்தலும் - உம் ஈற்று வினையெச்சம். தேர் - வினைத்தொகை.

80. கூற்றவனு மஞ்சுங் கொடுஞ்சூர் மகோதரனும்
பாற்றவொணு வென்றிகொண் மா பாரிசனு—மேற்றமரிற்
கோலிவளைந் தார்த்தயில்கைக் கொண்டுடற்றவெல் மகனும்
வாலிமக னுஞ்சாய்த்தார் மாய்த்து.

கூற்றவனும் அஞ்சும் கொடு சூர் மகோதரனும்—இயமனும் அஞ்சத்தக்க வலியுள்ள கொடிய மகோதரனும், பாறற ஒணு வென்றி கொள் மாபாரிசனும்—அழிக்கமுடியாத வெற்றியைக்கொண்ட மகாபாரிசுவனும், அமரில் ஏற்று—போர்க்களத்தில் எதிர்த்து, கோலி வளைந்து ஆர்த்து—சுற்றிவளைந்து கர்ச்சித்து, அயில் கை கொண்டு உடற்ற—வேலைக் கையிலேந்திப் போர் புரிய, எல மகனும்—சுக்கிரீவனும், வாலி மகனும்—அங்கதனும், மாய்த்து சாய்த்தார்—கொன்றுவீழ்த்தினர்.

உம்மைகளில் முன்னது உயர்வுசிறப்பு. பின்னவை நான்கும் எண்ணுப்பொருள. சுக்கிரீவன் மகோதரனையும், அங்கதன் மகாபாரிசுவனையும் கொன்றனனென நிரனிறையாக்கிக் கொள்க.

81. வாம்பரித்தே ரூர்ந்துகளம் வந்த விராக்கதர்கோன்
சாமபிவன்சே னைத்தலைவர் சாய்ந்தமைகண் - டேம்பியுருத்
தூதினன்சங் கங்க ளொருபதுவாய் வைத்துலகிற்
காதினிற்கை யேறக் கனன்று.

வாம் பரி தேர் ஊர்ந்து—தாவுகின்ற குதிரைபூண்ட தேரைச் செலுத்தி, களம்வந்த இராக்கதர் கோன்—போர்க்களத்து வந்த இராவணன், வன் சேனைத்தலைவர் சாமபி சாய்ந்தமை கண்டு—(தன்னுடைய) வலிய சேனைத்தலைவர் சோர்ந்து வீழ்ந்திருத்தலைப் பார்த்து, ஏமபி உருத்து கனன்று—வருந்திக் கோபித்து மனங்கொதித்து, உலகில காதினில கை ஏற—உலகத்தில் (மானிடர்) செவிகளில கைகள் ஏற (பொத்திக்கொள்ளும்படி), ஒருபது வாய்—பத்துவாய்களிலும், சங்கங்கள் வைத்து—சங்குகளைவைத்து, ஊதினன்—ஊதினான்.

வாவும் என்னும் பெயரெச்சம் "செய்யுமென்னெச்சவீற் றுயிர்மெய் சேறலும" என்பதனால் ஈற்றுயிர்மெய் கெட்டு வாம் என நின்றது.

82. வெற்பெடுத்து வீசவிறற் கவிகள் வெற்பெடுத்தான் [illegible]
விற்படுத்தெய் யேக்கள் விரைந்துபுகுக்—[illegible]பொடிக்கச்
சென்னியுரங் கையிற் செருகவுயர் வுற்றனவா
லன்னகுரங் கின்கணங்க ளாங்கு.

விறல் கவிகள் = வலிமையுடைய வானரங்கள், வெற்பு எடுத்து வீச = மலைகளையெடுத்து எறிய, வெற்பு எடுத்தான் = கைலைமலையை யெடுத்தவனாகிய இராவணன், வில் படுத்து எய் ஏக்கள் = வில்லில் தொடுத்து எய்த அம்புகள், விரைந்து புகுந்து = விரைவில் சென்று, எற்பு ஒடித்து = என்புகளை ஒடித்து, சென்னி உரம் கையில் செருக = தலைகளிலும் மார்புகளிலும் கைகளிலும் பதிந்துகொள்ள, அன்ன குரங்கின் கணங்கள் = அந்த வானரக்கூட்டங்கள், ஆங்கு அயர்வு உற்றன = அவ்விடத்தில் சோர்வடைந்தன.

ஆல் - அசைநிலை. எய் வினைத்தொகை.

என்பு எற்பு - "மென்றொடர் மொழியுட்சில வேற்றுமையிற் றம்மின வன்றொடராகா மன்னே" என்பதனால் வன்றொடராயிற்று.

83. வள்ள றனக்கிளை யான் மற்றது கண் டுள்வெகுண்டு
கொள்ளுசிலை கோட்டியழற் கோல்பூட்டி — யெள்ளரக்கன்
றேரொடுபா கற்சிதைத்துத் திண்கரவில் பத்தினையுங்
கூரொடறுத் தான்வேற்றேத் தொட்டு.

வள்ளல்தனக்கு இளையான் = அருள்வள்ளலாகிய இராமபிரானுக்கு இளையோனாகிய இலக்குமணன், அது கண்டு உள் வெகுண்டு = அவ்வானரங்கள் சோர்ந்ததை நோக்கி மனங்கொதித்து, கொள்ளு சிலை கோட்டி = கையிற்கொண்ட வில்லை வளைந்து, அழல் கோல் பூட்டி = தீயைக் கக்குகின்ற அம்புகளைத்தொடுத்து, எள் அரக்கன் = இகழத்தக்க இராவணனது, தேரொடு பாகன் சிதைத்து = இரதத்துடன் பாகனையும் அழித்து, வேறு ஏ தொட்டு = வேறு பாணத்தை எய்து, திண் கரம் வில் பத்தினையும் = (அவனது) வலிய கைகளிலுள்ள பத்துவிற்களையும், கூரொடு அறுத்தான் = வலிமையோடு அறுத்தனன்.

மற்று அசை. பாகன் சிதைத்து - "இயல்பின் விகாரமும்" என்ற சூத்திரத்தினால் பாகற்சிதைத்து என இயல்பில் விகாரமாயிற்று.

84. வெந்நிருதர் கோன்றேர்மா வீடணன்றண் டாற்புடைக்க
வன்னவனன் னான்மே லயிலெறிந்தான் — றுன்னுசினங்
கொண்டுதுணித் தானதைவிற் கோட்டிக் கணைதொடுத்துத்
தண்டுளவத் தானிளவல் சார்ந்து.

வீடணன் = விபீடணனானவன், வெம் நிருதர் கோன் தேர் மா = கொடிய இராக்கதர் தலைவனாகிய இராவணனது தேரிற்கட்டிய குதிரைகளை, தண்டால் புடைக்க = தண்டாயுதத்தினால் அடிக்க, அன்னவன் அன்னான்மேல் = அந்த இராவணன் அவன்மேல், அயில் எறிந்தான் = வேலை வீசினான்; தண் துளவத்தான் இளவல் = குளிர்ந்த துளவமாலையையணிந்த இராமபிரானுக்கு இளையோனாகிய இலக்குமணன், சார்ந்து = அங்கடைந்து, துன்னு சினம் கொண்டு = நெருங்கிய கோபங்கொண்டு, வில் கோட்டி கணை தொடுத்து = வில்லை வளைத்து அம்புகளைத்தொடுத்து, அதை துணித்தான் = அவ்வேலாயுதத்தைத் துண்டுபடுத்தினன்.

துன்னு - வினைத்தொகை. புடைக்க என்னும் எச்சம் எறிந்தான் என்னும் பிறகருத்தா வினையைக் கொண்டது.

85. அந்நாண் மயன்கை யளப்பிறா ணோவவினை
மன்னு வமைத்து மறையோடு—மின்னாரத்
தந்தவயில் வேலெறிந்தான் றானவர்கோன்/சாம்பியுர
நொந்தனனி ராமா நுசன்.

தானவர் கோன் = இராக்கதர் தலைவனான இராவணன், அ நாள் மயன் = அக்காலத்தில் மயன் என்பவன், கை அளப்பு இல் நாள் நோவ = கைகள் அளவற்ற காலம் வருந்தும்படி, வினை மன்ன அமைத்து = தொழிலையடைந்து இயற்றி, மறையோடும் இன் ஆர தந்த = மந்திரத்துடன் இன்பம் பொருந்தக் கொடுத்த, அயில் வேல் எறிந்தான் = கூரிய வேலை வீசினான்; இராமாநுசன் = இலக்குமணன், சாம்பி உரம் நொந்தனன் = சோர்ந்து மார்பிற் றைக்கப்பட்டு வருந்தினன்.

அளப்பு தொழிற்பெயர்; பு தொழிற்பெயர்விகுதி. மறை எ-து வேலைப் பிரயோகிக்கும் மந்திரம். இன் ஆரத்தந்த எ-து இராவணன் பகைவரை அவ்வேலால் வென்று இன்பமனுபவிக்கும்படி என்க.

86. வன்றிறலி ராவணன்பின் மற்றொருதே ரேறிப்பொன்
னொன்றியவி லங்கையுற வோர்ந்தநும-னன்றெனப்போய்
மாமருந்து வெற்பெடுத்து வந்திடச்சு சேணனெடு
தாமருந்து நல்கியிட்டா னாய்ந்து.

வன் திறல் இராவணன் = வலிய வெற்றியையுடைய இராவணன், பின் மற்று ஒரு தேர் ஏறி = பின்பு வேறொருதேரி லேறிக்கொண்டு, பொன் ஒன்றிய இலங்கை உற = பொன்மயமாய்ப் பொருந்திய இலங்கையை அடைய, அநுமன் ஓர்ந்து = அநுமான் (அதை) அறிந்து, நன்று என போய் = நல்லது என்று நினைத்து (வடதிக்கில்) சென்று, மா மருந்து வெற்பு எடுத்து வந்திட = பெரிய மருத்துமாமலையை எடுத்துக்கொண்டு வந்து சேர, சுசேணன் = சுஷேணன் என்னும் வானரன், ஆய்ந்து ஆம் மருந்து எடுத்து = (அம்மலையில) ஆராய்ந்து (சோர்வை நீக்குவது) ஆகிய மருந்தை எடுத்து, நல்கியிட்டான் = (இலக்குமணனுக்குக்) கொடுத்தனன்.

நன்று என்றது இங்கு இகழ்வுக் குறிப்புச்சொல். "கற்கறித்து நன்கட்டாய்" என்றாற்போலும். சுஷேணன்—வானரர்களுக்குள் ஒரு வைத்தியன்.

87. உய்ந்திளவன் முன்போலு யிர்த்தெழலுந் தாசரதி
வந்தவநு மாற்குழுக மன்கூற—வந்தமலை
யுள்ளவுழி யன்னான்மீட் டுய்த்துவரத் தானவர்கோன்
பொள்ளெனத்தே ரூர்ந்துவந்தான் போர்க்கு.

இளவல் = இலக்குமணன், உய்ந்து முன் போல் உயிர்த்து எழலும் = பிழைத்து முன்போற் சுவாசம்விட்டுக்கொண்டு எழுந்தவுடன், தாசரதி வந்த

அநுமாற்கு முகமன் கூற=இராமபிரான் (அம்மலையைக் கொண்டு) வந்த அநுமானுக்கு உபசாரமொழிகளைச் சொல்ல, அன்னான்=அவ்வநுமான், அந்த மலை உள்ள உழி மீட்டு உய்த்து வர=அந்த மருந்துமாமலையை முன் இருந்த விடத்தில் வைத்துத் திரும்பிவர, தானவர் கோன்=இராவணன், போர்க்கு பொள்ளென தேர் ஊர்ந்து வந்தான்=யுத்தஞ்செய்வதற்கு விரைந்து தேரைச் செலுத்திக்கொண்டு வந்தனன்.

பொள்ளென - விரைவுக்குறிப்பிடைச்சொல் மீட்டு - செய்தெனெச்சம்.

88. திக்கனைத்தும் வென்றவடற் றேரினின்று தானவர்கோன்
றொக்கசமராற்றச் சுனாசீரன்—றக்கதன்று
மேந்தல்படி நின்றுபொர லென்றுதேர் மாதலிநீ
போந்துதவு கென்றான் புரிந்து.

தானவர் கோன்=இராவணன், திக்கு அனைத்தும் வென்ற அடல்=திசைகளையெல்லாம் வெற்றிகொண்ட வலியையுடைய, தேரினின்று தொக்க சமர் ஆற்ற=தேரிலிருந்து (சேனைகள்) கூடிய போரைச்செய்ய, சுனாசீரன்=இந்திரன், ஏந்தல் படி நின்று பொரல்=அரசனாகிய இராமபிரான் பூமியினின்று போர்செய்தல், தக்கது அன்று ஆம் என்று=தகுதி அன்றாமென்று, புரிந்து=விரும்பி, மாதலி=மாதலி என்னும் சாரதியைநோக்கி, நீ போந்து=நீ (அவ்விடம்) சேர்ந்து, தேர் உதவுக என்றான்=(நமது) இரதத்தை (இராமபிரானுக்குக்) கொடுத்து உதவிசெய்யக் கடவை என்று சொல்லினன்.

மாதலி - இந்திரனது தேர்ப்பாகன். உதவுக ஈறுகெட்டது. என்று என்னும் எச்சம் புரிந்து என்னும் எச்சங்கொண்டது.

சுனாசீரன் - வடமொழித் தற்பவம்; சேனையின் முன்னிற்பவன்.

89. மாத்திரள்பூ ணவ்விரத மாதலியென் பான்கொணர்ந்
தேத்தியிதி லேறுகென வேறினான்—சீர்த்தவெழிற்
றங்கவரை மேற்குவட்டிற் றாவுசிங்க வேறென்னச்
செங்கமலக் கண்ணான் சிறந்து.

மா திரள் பூண=குதிரைக்கூட்டங்கள்பூண்ட, அ இரதம்=அந்தஇரதத்தை, மாதலி என்பான் கொணர்ந்து=மாதலியென்னுஞ்சாரதி கொண்டுவந்து, ஏத்தி இதில ஏறுக என=(இராமபிரானைத்)துதித்து இத்தேரில ஏறக்கடவீர் என்றுசொல்ல, செம் கமலம் கண்ணான்=செந்தாமரைமலர் போலும் கண்களையுடைய இராமபிரான், சீர்த்த எழில் தங்கம் வரை மேல் குவட்டில்=சிறந்த அழகிய பொன்மயமான மேருமலையின் மேலுள்ள உச்சியில், தாவு சிங்கம் ஏறு என்ன=தாவுகின்ற ஆண்சிங்கத்தைப்போல, சிறந்து ஏறினான்=சிறப்புற்று ஏறினன்.

தங்கவரை உவமானம்; தேர் உவமேயம்; சிங்கம் உவமானம்; செங்கமலக்கண்ணான் உவமேயம்; ஏறுதல் பொதுத்தன்மை. இஃது உவமையணி.

90 தேரே றிராவணனுஞ் செங்கோ லிராகவனுஞ்
சூரோ டெதிர்த்துமண்ணிற் சூழ்திசையிற் — சூரூரில்
வேட்புற்றார் வில்லிற்றம் விஞ்சைகள்காட் டித்திரிந்து
ஞாட்புற்றா ரெல்லிரவேழ் நாள்.

தேர் ஏறு=தேர்களில் ஏறிய, இராவணனும் செங்கோல் இராகவனும்= இராவணனும் நீதியையுடைய இராமபிரானும், சூரோடு எதிர்த்து=வலிமையோடு எதிர்த்து, மண்ணில் சூழ் திசையில் சூர் ஊரில் திரிந்து=மண்ணுலகத்திலும் சூழ்ந்ததிக்குகளிலும் விண்ணுலகத்திலும் வெருட்டித்திரிந்து, வேட்பு உற்ற ஆர்=விருப்பங்கொண்டு (தம்மை) அடைந்திருக்கிற, வில்லில் தம் விஞ்சைகள் காட்டி=வில்லினால் தம் தம் வித்தைகளைக் காட்டி, எல் இரவு ஏழ் நாள்=பகலும் இராவும் (நீங்காது) ஏழுதினம்வரை, ஞாட்பு உற்றார்=போர்செய்தலை யடைந்தனர்.

தேர்ஏறு என்றவிசேடணத்தை இராவணனுக்கும் இராமபிரானுக்கும் கொள்க. ஏறு வினைத்தொகை. செங்கோல்—நேர்மையாகிய துலாக்கோல்; அது நீதிக்கு உவமவாகு பெயராயிற்று. விஞ்சை—தநுர்வித்தை. வேட்புற்று ஆர்வில் என்று வில்லுகள் தாமேயிவ்விருவரையும் அடைந்திருக்கின்றன.

91. தீயவன்றோ ளைந்துஞ் சென்னிபத்துங் காகுத்தன்
பாயுமம்பி னாற்றுணிப்பப் பண்டுபோ — லாய்முளைத்து
மீட்டுமெதிர்த் தானவற்றை வீந்தமென வாயிரக்கால்
மாட்டியறுத் தான்குவித்தான் மற்று.

காகுத்தன்=இராமபிரான், தீயவன் தோள் நால் ஐந்தும்=கொடியவனாகிய இராவணனது இருபதுதோள்களையும், சென்னி பத்தும்=பத்துத்தலைகளையும், பாயும் அம்பினால் துணிப்ப=பாய்கின்ற பாணங்களினால் துண்டுகளாக்கவும், பண்டுபோல ஆய் முளைத்து=முன்போலாகி முளைக்கப்பெற்று, மீட்டும் எதிர்த்தான்=மறுபடியும் (இராவணன்) எதிர்த்துப்போர்செய்தனன், (இராமபிரான்), மற்று ஆயிரக்கால் மாட்டி அவற்றை=மீட்டும் ஆயிரமுறை (பாணங்களைப்) பூட்டி அத்தோள்களையும் தலைகளையும் அறுத்து வீந்தம் என குவித்தான்=அறுத்து விந்தியமலையைப்போலக் குவித்தனன்.

இராவணனுடைய தோள்தலைமுதலிய உறுப்புக்கள் அறுபட்டால் மீட்டும் உண்டாகுதல் பிரமதேவனால் கொடுக்கப்பட்ட வரத்தால் என்க. மீட்டும் உம்மை இறந்ததுதழீஇயது. மற்று - வினைமாற்றுப்பொருளில்வந்தது.

92 சாகரத்திற் கொப்புரைக்கிற் சாகரமே யொப்பார்நீண்
மாகமத னுக்கொப்பம் மாகமே — யேகுகணை
யேற்றுசிலை கைக்கொண் டிராமனுமி ராவணனு
மேற்றசமர்க் கஃதே யிணை.

சாகரத்திற்கு ஒப்பு உரைக்கில்=கடலுக்கு உவமை சொல்லுமிடத்து, சாகரம் ஏ ஒப்பு ஆம்=அந்தக்கடலே ஒப்பாகும், நீள்=நீண்ட [illegible]

துக்கு நட்புடைத்தாயத்திற்கு உவமை, அமாகம் ஏ=அந்தஆகாயமேயாம், (அவ்வபோல்), ஏகு கணை ஏற்று=செல்லுகின்ற அம்புகளைப்பூட்டுகின்ற, சிலை கை கொண்டு=விற்களைக்கைகளிற்கொண்டு, இராமனும் இராவணனும்= இராமபிரானும் இராவணனும், ஏற்ற சமர்க்கு=எதிர்த்துசெய்யும்போரு க்கு, இணை அஃது ஏ=உவமை அந்தப்போரேயாம் (மற்றொன்றில்லை என்ற படி)

ஏகாரம் மூன்றும் தேற்றப்பொருளன. உம்மைகள் எண். இது உவமையணி.

93. எய்ப்பில் லிராமனய னேவை யிராவணன்மே
லுய்ப்ப வுரம்போழ்ந்தாவி யுண்ணவவன்—மெய்ப்பரங்கீழ்
வீழ்ந்ததுதான் முன்னோசூழ் விண்ணவர்பெய் பூமாரி
வீழ்ந்ததுதான் முன்னோ விரைந்து.

எய்ப்பு இல்=(போரில்) சோர்வில்லாத, இராமன்=இராமபிரான், அயன் ஏவை=பிரமாத்திரத்தை, இராவணன்மேல் உயப்ப=இராவணன்மேல் பிர யோகிக்க, (அது), உரம் போழ்ந்து ஆவி உண்ண=மார்பைப்பிளந்து உயிரை உண்டுவிட, அவன்=அவ்விராவணனது, மெய் பரம் கீழ் வீழ்ந்தது=சரீரமா கிய பாரம் பூமியில் விழுந்ததானது, முன்னோ=முன்போ, சூழ் விண்ணவர் விரைந்து பெய்=சூழநதுள்ள தேவர்கள் விரைவாயப்பொழிந்த, பூமாரி வீழ்ந்தது=மலர்மழை (பூமியில) விழுந்ததானது, முன்னோ=முன்போ, (இவ்விரண்டில் எதுமுன்வீழ்ந்ததோ என்றபடி).

ஓகாரம் உ - ம விஞைப்பொருள; தேவர் இராவணசயகாரத்தை எதிர் நோக்கிநின்றாராதலின் இராவணனிறந்து உடல் வீழ்ந்ததும் மகிழ்ச்சியால் பூமாரி விரைந்துபொழிந்தனர் என்க.

94. சந்திரனற்றம்பார்த்துத் தாழ்த்திருந்து பெய்கதிரால்
சந்திரகாந் தக்குடம்வீழ் தாரையினன்—முந்துநனை
சாலரக்கர் கோன்றலைகள் சாமகளத்தி லிம்புரண்ட
காலகதி யார்கடப்பார் கண்டு.

சந்திரன்=சந்திரனைவன், அற்றம பார்த்து தாழ்த்து இருந்து=(இரா வணனது) சமயம்பார்த்துத் தாமதித்திருந்து, பெய் கதிரால்=வீசுகின்ற கிரணங்களினால், சந்திரகாந்தம் குடம் வீழ் தாரையினலே=சந்திரகாந்தம் என்னும் கல்லாலாகிய குடத்தினின்று வீழ்கின்ற நீர்த்தாரைகளினால், முந்து நனை=முற்காலத்தில் நனைந்திருந்த, சால் அரக்கர் கோன் தலைகள்=மிகுந்த அரக்கர்தலைவனாகிய இராவணனது பத்துத்தலைகளும், சாம களத்தினில் புரண்ட=(இராமபாணத்தினால்) இறப்புண்ட போர்க்களத்தில (காக்கை கழுகுகளால்) புரண்டன; (அதனால்), காலகதி கண்டு கடப்பார் யார்=கெடு வருங்காலத்தின்வருகையைத்தெரிந்து (அதை) நீக்கவல்லவா எவருள்ளார்? (ஒருவருமில்லையென்றபடி)

மூக்குநனைதலைகள் எ - து இராவணன் சிரமும் இடத்திற்கு வந்து ஆதனத்திலிருந்ததும் அங்குமேலே தூங்குகின்ற சந்திரகாந்தக்கற்கூடத்தில் சந்திரன் காத்துக்கொண்டிருந்து தன்கிரணங்களை வீச, அதனால் அக்கூடத்தின் துவாரத்தால் வீழ்ந்த நீரால் நனைந்தவை என்கவேற்றுப்பொருள்வைப்பணி.

95. ஒன்பானும் வாய்களையு முண்ணும்வா யாக்கிலன்வீ
ணன்பாக முற்றுமக டாக்கிலனே—தின்பார்யா
ரென்றயனை நிந்தித்த வீருடசை போர்க்களத்துத்
தின்றிரத்த முண்பேய்த் திரள்.

போர்க்களத்து=யுத்தகளத்தில், ஈருள் தசை தின்று=(பிணங்களின்) ஈரலையும் மாமிசத்தையும் தின்று, இரத்தம் உண் பேய் திரள்=இரத்தங்குடிக்கின்ற பேய்க்கூட்டங்கள், ஒன்பான் ஆம வாய்களையும்=(சரீரத்திலுள்ள) ஒன்பது துவாரங்களையும், உண்ணும் வாய் ஆக்கிலன்=உண்ணுகின்ற வாய்களாகப் படைத்திலனென்றும், வீண் அன்பு ஆகம் முற்றும்=பயனற்ற அன்புவைக்கப்பட்ட சரீரமுழுதும், அகடு ஆக்கிலன்=வயிறாகப்படைத்திலனென்றும், தின்பார் யார் என்று=(இம்மாமிசமுதலியவற்றைத்) தின்னுமவர் யாவருள்ளாரென்றும், அயனை நிந்தித்த=(தம்மைப்படைத்த) பிரமதேவனை நிந்தித்தன.

ஒன்பதுவாய்கள் - சரீரத்திலுள்ள கண் செவி நாசி வாய் முதலிய நவத்துவாரங்கள். தின்பார் யார் எ - து மாமிசங்கள் மிகுந்துள்ளனவாதலின் என்க. நிந்தித்த-அஃறிணைப்பலவின்பாற் படர்க்கைவினைமுற்று. ஏ-ஈற்றசை.

96. வித்தைமிகு தேவரிசை மேவினர்பொய் பொய்த்ததுநற்
சத்தியநீ டன்மந் தலையெடுத்த—வெத்திசையும்
வேதத் தொழுக்கம் விராவியது பெய்தனவான்
மாதத்தின் மூன்று மழை.

வித்தை மிகு தேவர் இசை மேவினர்=கல்விமிகுந்த தேவர்கள்(இராமபிரானது கீர்த்தியைப்) புகழ்தலையடைந்தனர் (துதித்தனர் என்றபடி), பொய் பொய்த்தது=பொய்மையானது பொய்மையாயிற்று (ஒழிந்ததென்றபடி), நல் சத்தியம் நீள் தன்மம் தலையெடுத்த=நல்லமெய்ம்மையும் மிகுந்த தருமங்களும் விருத்தியாயின, எ திசையும் வேதத்து ஒழுக்கம் விராவியது=எத்திக்குகளிலும் வேதநடை பரவியது, மாதத்தில் மூன்று மழை பெய்தன=ஒவ்வொரு மாதத்திலும் மூன்றுமழைகள் பொழிந்தன.

அறங்களை அழித்துக்கொண்டிருந்த இராவணன்முதலிய கொடியஇராக்கதர்கள் அழிந்தமையால் தேவர்புகழ்தல் முதலியவை நிகழ்ந்தன என்க. ஆல் அசை. பெய்தன வான் என்பதற்கு, வான்=மேகங்கள், மாதத்தில் மூன்றுமழைகளைப் பெய்தன எனவும் பொருள்கொள்ளலாம்.

7. வீடணனை நோக்கி விமல னிராவணற்குச்
சேடுறவீ மக்கருமஞ் செய்குகெனக்—கேடிலவன்
வேதவிதி யாற்றான் விரைந்தியற்றி யண்ணலிணைப்
பாதமலர் தாழ்ந்துநின்றான் பாங்கு.

விமலன்=இராமபிரான், வீடணனை நோக்கி=விபீடணனைப்பார்த்து, இராவணற்கு ஈமக்கருமம்=இராவணனாகிய உனது சேட்டனுக்கு உத்தரமை, சேடு உற செய்குக என=பெருமையாகச்செய்யக்கடவை என்று சொல்ல, கேடு இல் அவன்=அழிவில்லாத அவ்விபீடணன், வேத விதியால் விரைந்து இயற்றி=வேதவிதிப்படி விரைவில் செய்துமுடித்து, அண்ணல் இணை பாதமலர் தாழ்ந்து=இராமபிரானது திருவடித்தாமரைகளை வணங்கி, பாங்கு நின்றான்=அருகுவந்து நின்றனன்.

ஈமக்கருமம் எ - து இறந்தவர்க்குப் பின்னுள்ளார் செய்யுங் கடமைக் கிருத்தியம். விமலன் - மலரகிதமானவன் ; வடசொல். தான் - அசைநிலை.

98. பேரருட்டேன் வெள்ளப் பெருக்கூற்று செங்கமல
மோரிரட்டை கொள்காரோன் றுள்ளதே-னேருமண்ணல்
பின்னவனை நோக்கியின்னே பெட்பினினிவ் வீடணற்குப்
பொன்னமுடி சூட்டுகென்றான் போந்து.

பேர் அருள் தேன் வெள்ளப்பெருக்கு=மிக்க கருணையாகிய தேன் வெள்ளப்பெருக்கை, ஊற்று=கொட்டுகின்ற, செம் கமலம் ஓர் இரட்டை கொள்=ஒப்பற்ற இரண்டு செந்தாமரை மலர்களைக் கொண்டிருக்கிற, கார் ஒன்று உள்ளதேல்=மேகம் ஒன்றிருந்தால், நேரும் அண்ணல்=ஒப்பாகத் தக்க இராமபிரான், பின்னவனை நோக்கி=இலக்குமணனைப்பார்த்து, இன்னே போந்து=இப்பொழுதே (நீ இலங்கையில்) புகுந்து, இ வீடணற்கு=இந்த விபீடணனுக்கு, பெட்பினின் பொன்னம முடி சூட்டுக என்றான்=விருப்பத்தோடு பொன்னாலாகிய கிரீடத்தைச் சூட்டி வருவாயென்று சொல்லியேவினன்.

இரட்டைச்செங்கமலங்கொள் கார் நேரும் எ - து இல்பொருளுவமை. இராமபிரான் விபீடணனுக்குத் தான்நேரிற்சென்றுமுடிசூட்டாது இலக்குமணனை ஏவியது என்னையோவெனின்? தான் இலங்கையுட்புகின் அங்குள பொருள்களிலேதேனும் அவாவப்படுமென்பது போலும். அருட்டேன் - உருவகம்.

99. இந்தபகல் வைய மிராமன் சரிதமுள்ள
நந்தவிருட் காறுநீ நாற்றிசையுஞ்—செந்திதிரு
யோட்டிவிலங் கைப்பதியை யோம்புகெனப் பொன்மோலி
சூட்டினனன் றூந்திளவல் சூழ்ந்து.

அன்னாற்கு இளவல்=அவ்விராமபிரானுக்கு இளையோனாகிய இலக்குமணன், சூழ்ந்து=ஆலோசித்து, இந்த பகல் வையம் இராமன் சரிதம்=சந்தி

ரனும் சூரியனும் உலகமும் இராமாயணமும், உள்ள நக்தலும் இலங்கை கா றும்=நிலைத்திருக்கின்ற அழிவில்லாத காலம்வரையும், நாலு திசையும் செம் திகிரி ஓட்டி=நீ நான்குதிக்குக்களிலும் செம்மையாகிய ஆஞ்ஞாசக்கர ஞ்செலுத்தி, இலங்கைப்பதியை ஓம்புக என=இலங்காபுரியைக் காப்பாய் (விபீடணா) என்று சொல்லி, பொன் மோலி சூட்டினன்=பொன்னாலாகிய முடியை (அவனுக்குச்) சூட்டினன்.

காறும்-காலவரையைக் குறிக்கும் இடைச்சொல். உம் முற்றும்மை. மோலி - மௌலி என்னும வடமொழி மரூஉ. நந்தலில் நாள் காறும் என் றது விபீடணன் சிரஞ்சீவியர் எழுவரில் ஒருவனாதலின்.

100. பூண்டமுடி யோன்சூரன் புத்திரன்முன் னெல்லவர்க்கு
மாண்டவர்வேண் டாவெனவு மம்மணிப்பூண் - வேண்டநல்கி
வந்திறைதாள் டாழவரு மானுடனீ போய்க்கொண்டு
வந்திடென்னில் லாளையென்றான் மன்.

பூண்ட முடியோன்=கிரீடஞ்சூட்டப்பெற்ற விபீடணன், சூரன் புத்தி ரன் முன் எல்லவர்க்கும்=சூரியபுத்திரனாகிய சுக்கிரீவன் முதலிய எல்லார்க் கும், அம் மணி பூண்=அழகிய இரத்தினாபரணங்களை, ஆண்டு அவர் வேண் டா எனவும்=அப்பொழுது அவர் வேண்டா என்றுவெறுக்கவும், வேண்ட நல்கி=விரும்பும்படி கொடுத்து, வந்து இறை தாள் தாழ=வந்து இராம பிரானது திருவடிகளை வணங்க,மன்=இராமபிரான்,அநுமானுடன்நீபோய்= அநுமானுடன் நீ சென்று, என் இல்லாளை=எனது மனைவியாகிய சீதையை, கொண்டுவந்திடு என்றான்=கொண்டுவருவாய் என்று சொல்லினன்.

வேண்டா - அஃறிணைப பலவின்பாற் படர்க்கைக் குறிப்புவினைமுற்று. வந்திடு - இடு பகுதிப்பொருள் விகுதி.

101. அன்னவுரை கேட்டரக்க னஞ்சனைசே யோடேகி
மன்னியசோ கக்காவின் மங்கலஞ்சொற் - றன்னைதனை
யாயமருங் கிற்சூழ வாய்சிவிகை யேற்றிவந்து
நாயகன்முன் பால்விடுத்தா னன்று.

அன்ன உரை கேட்டு அரக்கன்=(இராமபிரானருளிய) அந்தச்சொல்லைக் கேட்டு விபீடணன், அஞ்சனை சேயோடு ஏகி=அஞ்சனையினுடன் சென்று, அசோகக்காவில் மன்னி=அசோகவனத்தில் அடைந்து, மங்கலம் சொற்று= மங்கலவாழ்த்துக்களைச்சொல்லி, அன்னைதனை=உலகமாதாவாகிய சீதாபிராட் டியை, ஆயம் மருங்கில் சூழ=மாதர்கூட்டம் பக்கங்களில் சூழ்ந்துவர, ஆய் சிவிகைஏற்றிவந்து=ஆராயத்தக்க பல்லக்கிலேற்றிக் கொண்டுவந்து,நாயகன் முன்பால் நன்று விடுத்தான்=இராமபிரானது முன்னிடத்தில் நன்மையாக விட்டனன்.

ஆய் சிவிகை - வினைத்தொகைநிலைத்தொடர். ஏகி மன்னி சொற்று ஏற்றி வந்து விடுத்தான் எனமுடிக்க. சொற்று - சொல் பகுதி, று இடைநிலை, உ வினையெச்சவிகுதி.

102. சானகியை நோக்கியென்சீர் தாவா தரக்கரைவான்
மேனிலைப் போக்கிநினை மீட்டனனின்—மேனசையான்
மீட்டிலனி யானிற்கு வேண்டுழிச்செல் கென்றுரைத்தான்
பாட்டினிசை போலும் பதி.

பாட்டின் இசை போலும் பதி=பாட்டினது இசையைப் போன்ற நாயகனாகிய இராமபிரான், சானகியை நோக்கி=சீதையைப்பார்த்து, யான்=நான், என் சீர் தாவாது=எனது இராசதருமம் கெடாமைக்காக, அரக்கரை வான்மேல் நிலைப் போக்கி=இராக்கதர்களை வீரசுவர்க்கத்தில் பொருந்தும் படி கொன்று, நினை மீட்டனன்=உன்னைத் திருப்பிக்கொண்டேன்: நின் மேல நசையால் மீட்டிலன்=உன்னிடத்துள்ள ஆசையினால் (உன்னைத்) திருப்பினேனல்லேன் : நிற்கு வேண்டுழி செல்க=உனக்கு வேண்டுமிடத்திற்கு (இனி நீ) செல்வாய், என்று உரைத்தான்=என்று சொல்லினன்.

சீர் எ - து இங்கு க்ஷத்திரியத்தன்மையை. பாட்டினிசைபோலும் பதி எ - து கீதப்பாட்டை விட்டுப்பிரியாத இசையொலியைப்போல் சீதாபிராட்டியை விட்டுப் பிரியாத நாயகன் என்க; பிரியாக்காதலுடையானாயினும் சீதை இராக்கதபூமியில் வசித்ததனால் அங்ஙனங் கூறினன் என்க.

103. என்றகொடுஞ் சொற்கேட் டிலக்குவனை நோக்கியொளி
யொன்றுநிமி ரங்கி யுதவுகென—வன்றிரப்ப
வையனரு ளாலிளவ லாக்கழற்புக் காளகற்பால்
வெய்யதழற் போன்றாள் விரைந்து.

என்றகொடு சொல்கேட்டு=என்றசொல்லியகொடியசொல்லைக்கேட்டு, அன்று=அப்பொழுது,கறபால் வெய்யதழலபோன்றாள்=கற்புடைமையால் வெம்மையான அக்கினியைப் போன்றவளாகிய சீதாபிராட்டி, இலக்குவனை நோக்கி=இலக்குமணனைப்பார்த்து, ஒளி ஒன்றி நிமிர் அங்கி உதவுக என=ஒளி பொருந்தி ஓங்கிய தீயை (உண்டாக்கித்) தாக்கடவை என்று, இரப்ப=இரந்து வேண்டிக்கொள்ளலும், இளவல்=இலக்குமணன், ஐயன் அருளால் ஆக்கு=இராமபிரானது கட்டளையால் உண்டாக்கிய, அழல் விரைந்து புக்காள்=தீயில் விரைவில வீழ்ந்தனள்.

தழற்போன்றாள் தழற்புக்காள் எ - து கற்பின் வலியால் இத்தழலை யுஞ் சயிப்பாள் என்னும் குறிப்பு. ஆக்கு - வினைத்தொகை.

104. அவ்வெரிகா குத்தனைநேர்ந் தன்னையிரா வணன்முன்
வெளவவர வென்பான் மறைந்திடவின்—றவ்வொடியா
னண்டியற்று மாயையினை யாயிழையென் றேகொணர்ந்தா
னீண்டொழிந்த தம்மாயை யே.

அ எரி=அவ்வக்கினிதேவன், காகுத்தனை நேர்ந்து=இராமபிரானை நோக்கி, இராவணன் முன் அன்னையை வெளவ வர=இராவணனானவன் முன்பு சீதாபிராட்டியைத் திருடிக்கொண்டு போகும்பொருட்டு(பஞ்சவடிக்கு) வர

என்பால் மறைந்திடலும் = (அவள் அஞ்சி) என்னிடத்து ஒளிந்துகொள்ளலும், யான் அவ்வொடு ஆண்டு இயற்று = நான் விநயத்துடன் அப்பொழுது உண்டாக்கிய, மாயையினை = மாயாசீதைவடிவத்தை, ஆயிழை என்று ஏ கொணர்ந்தான் = (உண்மையான) சீதை என்று நினைத்தே இங்குக் கொண்டு வந்தனன்: அ மாயை ஈண்டு அழிந்தது ஏ = அந்த மாயாசீதைவடிவம் இங்கு அழிவுற்றது.

ஏகாரம் - உ - ல், முன்னது தேற்றம், பின்னது ஈற்றசை. மாயாசீதை எ - து அக்கினிதேவன் மாயையினால் உண்டாக்கிய சீதைவடிவம்போன்ற ஒரு பொய்வடிவம். இது குளகம்.

105. என்பாற்கொள் சீதை யிவளென்ன விட்டிவளை
வன்பாய்த்தீ யோன்றீண்டின் மாய்ந்திடுவன் — முன்பேநீ
யையுறல்கொள் வாயென்றா னம்புயனுஞ் சம்புவுந்தன்
னையனும்வந் தஃதுரைத்தா ராங்கு.

என்பால் கொள் சீதை = என்னிடத்து ஒளித்துக்கொண்ட உண்மைச் சீதை, இவள் என்ன = இவளே என்று சொல்லி, விட்டு = (தன்னுளிருந்து வெளியில்) விட்டு, இவளை தீயோன் வன்பாய் தீண்டில் = இவ்வுண்மைச்சீதையைக் கொடியவனான இராவணன் வலிந்து தொட்டிருந்தால், முன்பே மாய்ந்திடுவன் = முற்காலத்திலேயே இறந்திருப்பான்: நீ ஐயுறல் = நீ ஐயங்கொள்ளற்க: கொள்வாய் என்றான் = (இவளைப்) பெற்றுக்கொள்வாயென்று (அக்கினிதேவன்) கூறினான்; அம்புயனும் சம்புவும் தன் ஐயனும் = (அப்பொழுது) பிரமதேவனும் உருத்திரமூர்த்தியும் (சுவர்க்கலோகவாசியா யிருக்கின்ற) தன்பிதாவாகிய தசரத சக்கரவர்த்தியும், ஆங்கு வந்து அஃது உரைத்தார் = அவ்விடத்துவந்து அக்கினிசொல்லியதையே (இராமபிரானுக்குச்) சொல்லினார்.

முன்பே மாய்ந்திடுவன் எ - து முன்பு இராவணன் கைலைக்குச்சென்று மீளும்போது வேதவதி என்பாளை விரும்பி வலிந்துபற்ற அவள் கடிந்து 'எந்த மாதரை நீ வலிந்து பற்றினாலும் உன்தலை வெடிக்கக்கடவது' என்றுகொடுத்த சாபத்தால் என்க.

வு - தேற்றம். ஐயுறல - எதிர்மறை வியங்கோள் வினைமுற்று.

106. அன்னவர்பூந் தாளிறைஞ்சி யாய்ந்துபின்னர்ச் சானகியைக்
கன்னவிறோட் காகுத்தன் கைக்கொண்டான் — வன்னமலர்ப்
பொன்னார் மிதிலையில்விற் பூட்டிவளைஇக் கைகொண்ட
வந்நாளினு முவகை யார்ந்து.

கல் நவில் தோள் காகுத்தன் = உலத்தோடு பழகிய புயங்களையுடைய இராமபிரான், ஆய்ந்து = அவ்வுண்மையை ஆராய்ந்து, அன்னவர் பூ தாள் இறைஞ்சி = அம்மூவரின் அழகிய பாதங்களை வணங்கி, பின்னர் சானகியை = பின்பு சீதாபிராட்டியை, வன்னம் மலர் பொன் ஆர் = நிறமமைந்த தாமரை மலர்த்திருமகள் வசிக்கின்ற, மிதிலையில் வில் பூட்டி வளைஇ = மிதிலாபுரியில் வில்லைப்பூட்டி வளைத்து, கைக்கொண்ட அ நாளினும் = கைப்பிடித்த

கை ஆர்ந்து=அதிகமகிழ்வை அடைந்து, கைக்கொண் க்கொண்டனன் (சுவீகரித்தனன்என்றபடி).

"டை அந்நாள் எ - து பாணிக்கிரகணஞ்செய்துகொண்ட திரு

—ஐந்தாம்வேற்றுமை ஒப்புப்பொருள். உம் - உயர்வுசிறப்பு. என்னும் எச்சம் வளை இ என அளபெடுத்தது. உலம்—உருண்ட "கற்சுண்ணஞ்செய்தோள்மைந்தர்" என்று சீவகசிந்தாமணிநாமகளி லம்பகத்தும் உள்ளது.

107 தந்தையடி யைத்தாழ்ந்து தாயைப் பரதனைமுன்
னிந்தையினு னீத்தசின நீத்தவனு—நந்தரணி
யங்குலத்தி னுக்குரிமை யாளவர நல்குகென்றான்
றங்குநில நேர்பொறையான் சார்ந்து.

தங்கு நிலம் நேர் பொறையான்=நிலைபெற்ற பூமியைப் போன்ற பொறுமையையுடைய இராமபிரான், தந்தை அடியை சார்ந்து தாழ்ந்து=பிதாவாகிய தசரதசக்கரவர்த்தியின் பாதங்களைக் கிட்டி வணங்கி, தாயை பரதனை=தாயாகிய கைகேசியையும் பரதனையும், முன் நிந்தையினால்=முன்பு அவர் செய்த நிந்தையான செய்கையினால், நீத்த சினம் நீத்து=விலக்கிய கோபத்தை நீக்கி, அவனும்=அப்பரதனும், நம் தரணி அம குலத்தினுக்கு=நமது அழகிய சூரியகுலத்திற்குள்ள, உரிமை ஆள வரம் நல்குக என்றான்=உரிய பொருள்களை ஆளும்படி வரங்கொடுத்திடுக என்று கேட்டனன்.

சினம எ - து முன் கைகேயி கேட்டவரத்தால் தசரதர் அவனை இகழ்ந்து நீக்கி அவள் மகனாகிய பரதன் இனி அரசுரிமையடையா னெனச் சொல்லிய கோபம என்க. நிலம நேர பொறையன் எ-து "அகழ்வாரைத்தாங்கு நிலம போலத் தமமை, இகழ்வார்பபொறுத்த றலை" என்றதனால் பூமியை உவமை சொல்லபபட்டது. அவனும என்றதில் உம்மை இறந்தது தழீஇயது.

108. வானின் றிழிந்துவந்த மன்னன் றயரதனு
மேனின்ற வாசை மிகுதியின்மண்—பானின்ற
மைந்தனைமார் போடு மகிழ்ந்துதழீஇ நல்கரிய
வந்தவரந் தந்தனனென் றான்.

வானின்று இழிந்து வந்த=சுவர்க்கத்திலிருந்து இறங்கிவந்த, மன்னன் தயரதனும=அரசனாகிய தசரதனும், மேல நின்ற ஆசை மிகுதியின்=மேலாயிருக்கின்ற ஆசையினது மிகுதியால், மணபால் நின்ற மைந்தனை=பூமியில் நிற்கின்ற தன்புத்திரனாகிய இராமபிரானை, மகிழ்ந்து மார்போடு தழீஇ=களித்து மார்பில் தழுவிக்கொண்டு, நல்கு அரிய அந்த வரம்=கொடுத்தற்கரிய (இராமபிரான் கேட்டுக்கொண்ட) அந்தவரத்தையும், தந்தனன் என்றான்=கொடுத்தனன் என்று சொல்லினன்.

உம்மை—உயர்வுசிறப்பு. கல்கு—முதனிலைத் தொழி னுருபு தொக்கது.

கoகூ. இந்திர னுமோர்வரங்கே ளென்னவிரா
ருந்தம்பால் வீழ்கவிக ளுய்தலென—வந்தவர
மன்று னளிக்கவுயிர்த் தவ்வா னரங்களண்ணல்
பொன்னார்தா டாழ்ந்த பொலிந்து.

இந்திரனும் ஓர் வரம் கேள் என்ன=(அங்கு வந்த)இந்திரனும் பிரானை நோக்கி) ஒருவரம் (என்னைக்) கேட்டுக்கொள்க என்றுசொல்ல, இராமன்=இராமபிரான், தீயோர் உந்து அம்பால் வீழ கவிகள்=கொடிய இராக்கதர் ஏவிய பாணங்களினால் இறந்து விழுந்துகிடக்கின்ற வானரங்கள், உய்தல் என=பிழைத்தெழுதலாம என்று கேட்க, அன்னான் அந்த வரம் அளிக்க=அவ்விந்திரன் அவ்வரங்கொடுத்தலும், அவ்வானரங்கள் உயிர்த்து= அந்தவானரசேனைகள் பிழைத்துயிர்பெற்று, பொலிந்து=விளக்கமுற்று, அண்ணல் பொன் ஆர் தாள் தாழ்ந்த=இராமபிரானது அழகுநிரம்பிய திரு வடிகளை வணங்கி நின்றன.

உம்மை—இறந்ததுதழீஇயது. உய்தல்—பெயர்ப்பயனிலை; தொழிற் பெயர்.

கக0. விண்ணோர் மறைந்திடலும் வீடணனன் பாலுதவு
பண்ணாரும் புட்பகத்தின் பாலிளவன்—மண்ணீன்ற
மாதுகவிச் சேனையொடு வாவினான் காகுத்தன
சேதுவையுற் றார்ந்தான் றிகழ்ந்து.

விண்ணோர் மறைந்திடலும=தேவர்கள் மறைந்து சென்றவுடன், வீட ணன் அன்பால உதவு=விபீடணன் அன்போடு உதவிய, பண ஆரும=அலங் கரித்த லமைந்த, புட்பகத்தின்பால=புட்பகவிமானத்தில, காகுத்தன்= இராமபிரான், இளவல் மண் ஈன்ற மாது=இலக்குமணனும் யாகபூமியினாற் கொடுக்கபபட்ட சீதாபிராட்டியும, கவி சேனையொடு=வானரசேனைகளும் ஆகிய இவர்களோடு, வாவினான்=ஏறினனாகி, திகழ்ந்து=விளக்கமுற்று, சேதுவை உற்று ஆர்ந்தான்=(முன்பு தன்னாற் கடலில் கட்டப்பட்ட) அணை யையடைந்து பொருந்தியிருந்தனன்.

வாவினான் - முற்றெச்சம் கபி சேனை எ - து கபி என்னும் வடசொல் கவி எனத்திரிந்த தற்பவ மாதலிற் கவிசசேனை என வலிமிகுந்தது. சேது வடசொல்லாதலின் குற்றுகரமாகாது ஐஉருபு வந்து புணர உடம்படுமெய் பெற்றுச சேதுவை எனப்புணர்ந்தது.

மண் ஈன்ற மாது என்பதற்கு - உலகங்களைப்பெற்ற அன்னையாகிய இலக்குமிதேவியான சீதாபிராட்டி எனப் பொருள் கொள்ளலுமாம்.

போர்புரிகாண்டம் முற்றிற்று.

---